# மதமும் மனித வாழ்வும்

ப. ஜீவானந்தம்





நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை — 600 098.

# பொருளடக்கம்

# முன்னுரை

நமது வணக்கத்திற்குரிய தோழர் ப. ஜீவானந்தம் எழுதியுள்ள "மதமும்-மனித வாழ்வும்" என்கிற இந்த நூலுக்கு முன்னுரை எழுதும் பேறு எனக்குக் கிடைத்துள்ளதற்கு மகிழ்ச்சியடைகிறேன்.

தோழர் ஜீவானந்தம், தமிழகத்தில் தலைசிறந்த கம்யூனிஸ்ட் சிந்தனையாளர் இருவர்களில் ஒருவர். மற்றவர் தோழர் ம. சிங்காரவேலர். கம்யூனிஸத் தத்துவப் பிரச்சாரத்தையும், தமிழ் இலக்கியத்தையும் இழையோட்டி தமிழ் மக்களுக்கு வழங்கிய மேதை தோழர் ஜீவா. அவருடைய கருத்துச் செலுத்தப்பட்டு, தமிழ் இலக்கியமும் சிறப்புப் பெற்றது.

மதம் மக்களை மயக்கும் அபின். இருப்பினும் விஞ்ஞான ரீதியில் மத ஆதிக்கத்தையும் மூட நம்பிக்கைகளையும் எவ்வாறு எதிர்த்துப் போராடுவது என்பது மனித சமுதாய மாறுதலின் மறுமலர்ச்சி இயக்கத்தின் தனிப் பிரச்சினையாகும்.

பொருளாதார அமைப்பிலும், அரசியலிலும் சுரண்டுகிற வர்க்கங்கள் ஆதிக்கம் செலுத்துகின்ற சமுதாயத்தில், மதத்தைப் பற்றியும், கடவுளைப் பற்றியும் ஆஸ்திகப் பிரச்சாரம் ஆதிக்கம் செலுத்தும், மதமும் கடவுளும், சுரண்டுகிற வர்க்கங்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அபயம் புகும் கடைசி ஆயுதம் ஆகும்.

எனினும் சுரண்டப்படுகின்ற வர்க்கங்களாகிய தொழிலாளர்கள், விவசாயிகள், படித்த நடுத்தர வர்க்கத்தினர்

பெரும் பகுதி, மதத்தின் பெயரால், கடவுளின் பெயரால், தலைவிதியின் பெயரால், புண்ணியம் பாவத்தின் பெயரால், நல்வினை - தீவினையின் பெயரால் மூட நம்பிக்கைகளுக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர்.

எனவே உழைக்கும் மக்களின் ஒற்றுமையைக் குலைக்க இடமளிக்காதவாறு மதம், கடவுள், மூட நம்பிக்கை போன்றவைகளை எதிர்த்துப் போராடி இருக்க வேண்டும். மூட நம்பிக்கைகளை எதிர்த்துப் போராடுகின்ற முறைகள், வர்க்க ஒற்றுமையை உருவாக்குவதற்கு உட்பட்டிருக்க வேண்டும்.

முதலாளித்துவ-நிலப்பிரபுத்துவ அமைப்புதான் மதம், சமயம், கடவுள் போன்ற மூட நம்பிக்கைகளைப் பரப்புவதற்கு ஆணிவேர். அத்தகைய அமைப்பை எதிர்த்துப் போராட வளர்க்கின்ற ஒற்றுமையின் மூலம்தான், மூட நம்பிக்கைகள், ஜாதி, மத வேற்றுமைகளையும் களைவதற்கான சூழ்நிலையை உருவாக்குவது ஏதுவாகும். அன்றி மதம்-கடவுள் போன்ற மூட நம்பிக்கைகளை, எதிர்த்துப் போராடுவதற்கு முதலிடமளிப்பது, முதலாளித்துவ-நிலப்பிரபுத்துவ அமைப்பைத் தகர்க்க வேண்டுமென்கிற வர்க்க உணர்வைத் திசை திருப்பி விடும், சீர்த்திருத்தவாத சாகசமாகிவிடும்.

ஜாதியின் பெயரால், மதத்தின் பெயரால் ஏற்பட்டுள்ள தாழ்வுகளை எதிர்த்து, சகல பகுதி மக்களுக்கும் சம உரிமைகளுக்காகவும் சம சுதந்திரத்திற்காகவும் நிற்பது கம்யூனிஸ்ட் கட்சியாகும். தமிழகத்தில் திராவிடக் கழகமும் தி.மு.கழகமும் பகுத்தறிவு இயக்கத்தை ஓரளவிற்கு நடத்தியுள்ளன. அவற்றினுடைய நடவடிக்கைகள் விஞ்ஞான அடிப்படை கொண்டவையல்ல. எனவேதான் வரட்டு "நாத்திக"ப் பிரச்சாரத்திலிருந்து ஒன்றே குலம், ஒருவனே தேவன் என்கிற சர்வ மத சமரச சித்தாந்த நிலைக்கு தி. மு. கழகத்தினர் வந்துள்ளனர்.

திராவிடக் கழகம், தி.மு.க. ஆகிய இயக்கத்தின் பகுத்தறிவுப் பிரச்சாரத்தில் உள்ள ஊனங்களைத் தோழர் ஜீவா,

மார்க்சிய மெய்ஞானத்தின் வெளிச்சத்தில் அலசி ஆராய் கின்றார், இந்தச் சிறு நூலில்.

மதத்தைப்பற்றி மார்க்சிய - லெனினிய அடிப்படை அணுகுமுறை எவ்வாறு இருக்கவேண்டும், மத எதிர்ப்பில் சரியான பாதை எது, தவறான பாதை எது என்பதைப் புரிந்து கொள்வதற்கு இந்த நூல், புதுமையைக் கற்றுக் கொள்ளத் துடிக்கும் இளைஞர்களுக்கும், குறிப்பாக மாணவர்களுக்குப் பெரிதும் பயனளிக்கும்.

**எம். கல்யாணசுந்தரம்**
செயலாளர்,
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி
தமிழக மாநிலக் குழு.

சென்னை
4-2-1969

# நான் ஒரு நாத்திகன்

''ஷெல்லி—ஒரு நாத்திகன், ஒரு ஜனநாயகவாதி, ஒரு மனிதன்."

இவ்வாறு, ஆங்கில நல்லிசைக் கவிஞராகிய ஷெல்லி தாம் நேப்பிள்ஸ் என்ற நகரத்தின் படிப்பகம் ஒன்றிற்குச் சென்றிருந்தபொழுது அங்கிருந்த பெயர்ப் பதிவு ஏட்டில் தீட்டினர்.

அதே ஷெல்லி மாணவராக இருந்த காலத்தில் ஒரு நிகழ்ச்சி நேர்ந்தது. அவர் ஒரு நாத்திகர் என்று கல்லூரித் தலைமை ஆசிரியருக்கு எப்படியோ தெரிந்து விட்டது. உடனே ஒரு உத்தரவு பிறந்தது: ''இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் ஷெல்லி கடவுளைக் கண்டு பிடிக்காவிட்டால் அவனைக் கல்லூரியிலிருந்து கல்தா கொடுப்பேன்."

ஷெல்லிக்காவது 24 மணி நேரம் அனுமதிக்கப்பட்டது. ஆனல் இன்றைய மதக் கிறுக்கர்களும் ஆஸ்திக வெறியர் களுமோ அந்த நேரம் கூட அனுமதிக்கத் தயாராக இல்லை. கம்யூனிஸ்டு விரோதிகளான இந்து, முஸ்லிம், கிறிஸ்துமதப் பிற்போக்காளர்களும் ஒரு கூட்டணி வகுத்து ஒரே மேடையிலேறி ஒரே குரலில் ஒரே பல்லவியை ஊளையிடுகிருர்கள்.

''கம்யூனிஸ்டுகள் மத விரோதிகள்; அவிசுவாசிகள்; நாத்திகர்கள்; பொருள் முதல்வாதிகள். அவர்களைப் பகிஷ்கரியுங்கள்."

திடீரென்று யாரேனும் ஒருவர் அவர்கள் அருகாமையில் சென்று, 'நீங்கள் சொல்வது சரிதான். ஆனல் நான்

எந்த மதத்தை நம்ப வேண்டும்?'' என்று கேட்டுவிட்டால் போதும். என்ன நிகழும் தெரியுமா?

வேதாகமம் சாஸ்திரி சொல்வார். ''சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற சதுர்வித மார்க்கங்கள் இந்து மதத்தில்தானுண்டு. உருவ வழிபாடு, அருவ வழிபாடு இரண்டின் மூலமாகவும் சாலோக, சாரூப, சாமீப, சாயுஜ்ய பதவிகளை இந்து மதத்தில்தான் அடைய முடியும். எனது மதம்தான் மோட்ச சாம்ராஜ்யத்திற்குச் சரியான ராஜ பாதை.'' சிவநேசச் செல்வர் உடனே ஆரம்பிப்பார்: ''சிவாய நமவென்று சிந்தித்திருப்பார்க்கு அபாயம் ஒரு நாளுமில்லை! சைவநெறியே மெய் நெறி.''

இதற்குள் வைணவ சிரோமணி எழுந்து விடுவார்: ''இம்மையே ராமா என்ற இரண்டெழுத்தினால் நன்மையும் செல்வமும் நாளும் நல்கும்'' என்று அடித்துக் கூறுவார்.

மூஸ்லிம் மௌல்வி கண்கள் சிவக்கச் சொல்வார்: ''விக்ரக ஆராதனை (கல்லையும் செம்பையும் குறிப்பிடுவது) ஹராம். அல்லாவின் திருவடி நிழலைப் பெறுவதற்கு நேர் வழிகாட்டுவது எனது மதம் ஒன்றே. எனது மதமே சத்ய மதம்.''

உடனே கிறித்தவப் பாதிரியார் குதித்தெழுந்து உபதேசம் செய்யத் தொடங்குவார்: ''பாவிகளே! உங்களுக்குப் பாவ மன்னிப்பு வேண்டுமென்றால், பரமண்டலத்திலிருக்கும் பிதா, தேவகுமாரன், பரிசுத்த ஆவி ஆகியவர்களிடம் அசையா நம்பிக்கை வைத்து ஞானஸ்நானம் பெறுங்கள்! எனது மதம் ஒன்றுதான் சத்திய மதம்.''

இவ்வாறு ஒரு பயங்கரச் சொற்போர் துவங்கும். விபூதிக் குறிக்கும் மெழுகு திரிக்கும் இடையில், சிலுவைக்கும் பூணூலுக்கும் இடையில், துருக்கித் தொப்பிக்கும் துளசி மணிக்கும் இடையில், பட்டை நாமத்திற்கும் கட்டுப் பூச்சுக்கும் இடையில், மொட்டைத் தலைக்கும் முழுத்தாடிக்

கும் இடையில், ஒரு 'லடாய்' ஆரம்பிக்கும், ''எல்லாம் வல்ல இறைவனை''க் காக்கும் பொருட்டு. அது, ஒருவேளை, வெட்டுப் பழி குத்துப் பழியில் கொண்டுபோய் விடவும் கூடும்.

இந்திய சரித்திரத்தைப் பார்த்தாலும் சரி, உலக சரித்திரத்தைப் பார்த்தாலும் சரி, பௌத்தனுக்கும் பார்ப்பானுக்கும் சண்டை, சைவனுக்கும் சமணனுக்கும் சண்டை, வடகலைக்கும் தென்கலைக்கும் சண்டை, கிறித்தவனுக்கும் முஸ்லிமுக்கும் சண்டை, இந்துவுக்கும் முஸ்லிமுக்கும், இந்துவுக்கும் கிறித்தவனுக்கும் சண்டை, ரோமன் கத்தோலிக்கனுக்கும் புராட்டஸ்தனிக்கும் சண்டை, ஸன்னிக்கும் ஷியாவுக்கும் சண்டை—இவ்வாறு எத்தனை எத்தனை சண்டைகள்! கடவுளைக் காப்பாற்றும் பொருட்டு, எத்தனை எத்தனைக் கொலைகள், கொள்ளைகள், வெட்டுப் பழி, குத்துப் பழிகள், கழுவேற்றங்கள், நெருப்பிட்டுப் பொசுக்கல்கள், சித்திரவதைகள், யுத்தங்கள்! கடவுளைக் காப்பாற்ற மத பக்தர்கள் போராடிப் பெருக்கிய இரத்த ஆறுகளை நினைத்தால் உலக யுத்தங்கள்கூட வெட்கித் தலைகுனியும்!

இவ்வாறு மனித வர்க்கத்தின் இரத்தம் ஆறாக ஓடுவதைக் காண நான் விரும்பவில்லை. ஆகவே நான் மத நம்பிக்கைக்கு எதிரி.

**'தீயினைக் கும்பிடும் பார்ப்பார்—நித்தம்**
**திக்கை வணங்கும் துருக்கர்**
**கோயில் சிலுவையின் முன்னே—நின்று**
**கும்பிடும் ஏசு மதத்தார்''**

முதலிய எல்லா மத நம்பிக்கைக்காரர்களுக்கும் அது போல் எந்த ஒரு மதத்திலும் பற்றில்லாதவர்களுக்கும் இந்தப் பரந்து விரிந்த உலகத்தில் சண்டை போடாமல் சகோதர வாஞ்சையோடு வாழ்வதற்கு வேண்டிய நிலப் பரப்பு இருக்கிறதென்பது எனது நம்பிக்கை. ஆகவே, நான் எனது கருத்துக்கு உடன் படாதவர்களுடன் வம்புக்கு நிற்க

வில்லை. அவர்களும் என்னோடு வம்புக்கு வர வேண்டிய அவசியமில்லை.

நான் ஒரு நாத்திகனான கம்யூனிஸ்ட். அப்படியானால் ஆத்திக உணர்ச்சியுள்ள கம்யூனிஸ்டுகளும் இருக்கிறார்களா? இருக்கக்கூடாது என்றில்லை. ஒரு மதத்திலும் நம்பிக்கையில்லாத நாத்திகர்களுக்கு மட்டும்தான் தொழிலாளர்களின் அரசியல் கட்சியான கம்யூனிஸ்ட் கட்சியில் இடமுண்டு என்று கட்சியின் திட்டமோ, கட்சியின் ஸ்தாபன விதிகளோ திட்டவட்டமாக வரையறுத்துக் கூறவில்லை. நேர்மாறாக, தொழிலாளர் கட்சி, மத நம்பிக்கைகளைப் பலாத்காரமாக எதிர்ப்பது தவறு என்று மார்க்ஸிய ஞானாசிரியர்கள் அழுத்தந்திருத்தமாகக் கூறியிருக்கிறார்கள்.

1874ல் நாத்திகத்தைத் தொழிலாளர் கட்சி கொள்கைப் பிரமாணமாக அங்கீகரிக்க வேண்டுமென்பதை எங்கெல்ஸ் எதிர்த்தார். மத நம்பிக்கைக்கு எதிரிடையாகப் பகிரங்கப் போர் முழக்கம் செய்வது அறிவீனம் என்றும் அது மதநம்பிக்கையைத் தேய்ந்து மாய்ந்துபோகச் செய்வதற்குப் பதிலாக அதனை நிலைநிறுத்தவே உதவும் என்றும் கூறினார். தொழிலாளி வர்க்கம் நடத்தும் வர்க்கப் போராட்டம்தான் பெருவாரியான பாட்டாளி மக்களை மேலும் மேலும் வசீகரித்து அவர்களை உணர்வு பூர்வமான புரட்சிகரமான சமுதாய நடவடிக்கைகளில் ஈடுபடுத்தும் என்றும், அடக்கி ஒடுக்கப்பட்ட மக்களை மதப் பிடிப்பிலிருந்து விடுதலை செய்யும் என்றும் எடுத்துக் காட்டினார்.

மத எதிர்ப்புப் போரைக் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் லட்சியமாகப் பிரகடனப்படுத்த வேண்டுமென்ற வாதம் பூர்ஷுவா அராஜகவாதிகளுடைய வாதம் என்று லெனின் சுட்டிக்காட்டியுள்ளார். அதனால்தான் லெனின் மதத்தைப் பற்றி எழுதியுள்ள தமது நூலில் மதநம்பிக்கையுள்ள தொழிலாளிகளைக் கட்சியில் கொண்டுவர குறிப்பிட்ட அளவிற்குக் கவனம் செலுத்த வேண்டுமென்று வற்புறுத்துகிறார். லெனினுடைய கருத்தில் புரோகிதன்கூட கம்யூனிஸ்ட் கட்சியில்

சேரலாம். ஆனால் ஒரு நிபந்தனை; அவன் கட்சியின் திட்டத்தை எதிர்க்கக்கூடாது. மாறாக, கட்சியின் திட்டத்தை நடைமுறையில் கொண்டுவர உணர்வு பூர்வமாக முழு மூச்சோடு பணியாற்ற வேண்டும். கட்சியின் கட்டுப்பாட்டிற்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். மதப்பிரச்சாரத்திற்கான ஒரு கருவியாகக் கட்சியை உபயோகிக்கக் கூடாது. அவ்வளவுதான்.

மதத்தைப் பற்றி லெனின் வகுத்த கொள்கைகளின் அடிப்படையில்தான் சோவியத் யூனியனிலும், கம்யூனிஸ்ட் கட்சிகளின் தலைமையில் ஆட்சி நடைபெறும் இதர நாடுகளிலும் மத நம்பிக்கைகளுக்குப் பரிபூரண சுதந்திரம் வழங்கப்பட்டிருக்கிறது.

இங்குதான் பகுத்தறிவு வாதிகளான பெரியார் ஈ.வே.ரா., சி. என். அண்ணாதுரை, (இவர்கள் இன்று 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற கொள்கை பேசுகிற பகுத்தறிவு வாதிகள்) எஸ். இராமநாதன் ஆகியவர்களுக்கும் கம்யூனிஸ்டான எனக்குமுள்ள வித்தியாசம் இருக்கிறது. மத நம்பிக்கை பகுத்தறிவுக்கு விரோதமானவை என்றும் பகுத்தறிவாலும், அறிவுப் பிரச்சாரத்தாலும் மத நம்பிக்கைகளை வேரோடு சாய்த்துவிட முடியுமென்றும் பகுத்தறிவுவாதிகள் நம்புகிறார்கள் ஒரு மார்க்ஸியவாதியான நான் பொருள் முதல்வாதியாக இருப்பதால் திட்டவட்டமாக எல்லாவித மத நம்பிக்கைகளுக்கும் பரம வைரி என்பதில் சந்தேகமில்லை. ஆனால் எனது பொருள் முதல் வாதம் பகுத்தறிவுக்காரர்களுடைய பொருள் முதல்வாதத்தை விட எத்தனையோ மடங்கு சிறந்ததாகும்

மத நம்பிக்கைகளுக்கு யதார்த்தமான, லௌகீகமான காரணங்கள் உண்டு என்று நான் கருதுகிறேன். அந்தக் காரணங்கள் நிலைத்து நிற்கும் வரையில் மத நம்பிக்கை நிலைத்து நிற்கும். வெறும் தத்துவார்த்தப் பிரச்சாரத்தால் மட்டும் மத நம்பிக்கையை ஒழித்துவிட முடியாது மத நம்பிக்கைகள் இல்லாதொழிய வேண்டுமானால் அவற்றிற்கு

அடிப்படையாக நிலைத்து நிற்கும் பௌதீகச் சூழ்நிலைகள் மாற வேண்டும். மதத்தின் 'சமுதாய வேர்களை' ஆணி வேர், பக்க வேர், சல்லி வேரோடு கிள்ளி யெறிகிற நோக்கோடு நடைபெறும் போராட்டத்தை உருவாக்கி நடத்தாமல், மத நம்பிக்கைகளோடு போர் தொடுக்கச் செல்லுகிறவர்கள் உண்மையில் மத நம்பிக்கைகளைப் புத்துயிரூட்டி உறுதிப்படுத்தவே செய்கிறார்கள். எனவே இன்றைய சமுதாயத்தை மாற்றுவதற்காக நடைபெறும் மகத்தான போராட்டங்களிலிருந்து ஒதுங்கி நின்று கொண்டு பொதுமக்களுடைய கவனத்தை வேறு திசையில் திருப்பிவிட முயற்சிக்கும் பகுத்தறிவு வாதிகளின் பொருள் முதல் வாதம் ஒப்புக்கொள்ளத் தக்கதல்ல. பகுத்தறிவு வாதிகளின் பொருள் முதல் வாதம் பூர்ஷுவா பொருள் முதல் வாதமாகும். அது அராஜகச் சொற் சிலம்பு வீசி, வர்க்கப் போராட்டத்தை மறைத்து மறைமுகமாக முதலாளித்துவத்தையே ஆதரிக்கும். நேர் மாறாக எனது பொருள் முதல்வாதம் இயக்குவியல் பொருள் முதல்வாதம் (Dialectical Materialism) ஆகும். அதாவது மார்க்ஸியப் பொருள் முதல்வாதமாகும்.

இந்தப் புதிய பொருள் முதல் வாதத்தின் துணை கொண்டுதான் நான் இயற்கையையும், பிரபஞ்சத்தையும், சமுதாயத்தையும், பொருளாதார அமைப்புகளையும், அரசியல் ஸ்தாபனங்களையும், பொருளாதாரத் தேவைகளையும், மதத்தையும், தத்துவ ஞானத்தையும், சன்மார்க்கத்தையும், கலையையும், இலக்கியத்தையும், பண்பாட்டையும் இவை யாவற்றையும் அலசிப் பார்க்கிறேன். எல்லாவற்றையும் விஞ்ஞான ரீதியாகப் படிக்கவும் பரிசீலனை செய்து பார்க்கவும் இந்தப் பொருள் முதல்வாதம் எனக்குப் பெருந் துணை செய்கிறது. இந்தப்பொருள் முதல் வாதம் விஞ்ஞான ரீதியானது. ஏனென்றால் இது உண்மையானது. சோவியத் யூனியன், சீனா, புதிய ஜனநாயக நாடுகள் ஆகிய உலகத்தின் மூன்றிலொரு பகுதி நிலப் பரப்பில் இது நடைமுறையில் தெளிவு படுத்தப்பட்டிருக்கிறது. பொருளாதார வாய்ப்பை

யும் பொருளாதாரத் தேவைகளையும் மாற்றுவதற்கு இந்தப் பொருள் முதல் வாதம்தான் எனக்குப் புத்தாற்றலும் புதுஊக்கமும் அளிக்கிறது. இந்தப் பொருள் முதல்வாதத்தின் வெளிச்சத்தில்தான் நான் மத நம்பிக்கைகளைக்கூட அலசிப் பார்க்கிறேன்.

ஆதிகால மனிதனாகிய காட்டாளன் இயற்கைச் சக்திகளின் முன்னால் கையாலாகாதவனாகவும், ஆதரவற்றவனாகவும் விளங்கினான். இந்தப் பலவீனமும் நிராதரவும்தான் மத நம்பிக்கைக்கு அடிப்படைகள். அறியாமையும் பயமும் மத நம்பிக்கையின் பெற்றோர்கள் என்பது இந்த உண்மையை வேறு விதமாகக் கூறுவதே. பூஜை புனஸ்காரங்களாலும், வணக்க வழிபாடுகளாலும், மந்திர தந்திரங்களாலும், நேர்ச்சை படைப்புகளாலும் இயற்கைச் சக்திகளை அடக்கி ஆளலாமென்று பண்டைய மனிதன் நம்பினான். ஆனால் உற்பத்தி சக்திகளின் வளர்ச்சியோடு மனிதனுடைய அறிவும் வளர்ந்தது. விஞ்ஞானம் மெல்ல மெல்லக் குருட்டு நம்பிக்கைகளை அறைகூவத் தொடங்கிற்று.

சமுதாயம் வர்க்கங்களாகப் பிரிவுபட்ட பின்னர் வர்க்கப் போராட்டங்கள் முறுக்கேறத் துவங்கிய பொழுது அடக்குமுறையின் வேகம் அதிகரித்த காலையில் மதநம்பிக்கைகளுக்குப் புதியதோர் தேவை ஏற்பட்டது. ஆளும் வர்க்கத்தினிடம் உதையும் மிதியும் பட்டு நரக வாதனைப்படும் அடிமைப்பட்ட வர்க்கத்தாரின் நிராதரவு உணர்ச்சிக்கு ஒரு ஊன்றுகோல் தேவைப்பட்டது. வாழ்வு துன்பக் கேணி, துக்கமயம், மரணத்திற்குப் பின்னராவது இந்தத் துயரங்கள் தீருமென்றால், இந்தப் பிறவிக்கு அப்பாலாவது நிறை இன்ப வாழ்வு கைகூடுமென்றால் எவ்வளவு நன்றாய் இருக்குமென்று பட்டது.

மார்க்ஸ் குறிப்பிட்டார்; ''மதம் துன்பப்படுகிறவர்களுக்குப் பெருமூச்சாகும்; இதயமற்ற உலகத்திற்கு இதயமாகும்; உயிரில்லாத பௌதீகச் சூழ்நிலையின் உயிராகும்; மக்களுடைய அபினி அது.''

பொது மக்களுக்கு ஏற்பட்ட மேற்படி நிராதரவுக்குத் தித்திப்பு ஊட்டவே மத நம்பிக்கைகள் உபயோகிக்கப் பட்டன. ஆளும் வர்க்கத்தின் கையில் மதம், பொது மக்களைச் சுரண்டுவதற்கும் ஆத்மீக ரீதியாக அடிமைப் படுத்துவதற்கும் ஓராயுதமாய் விளங்குகிறது.

பெருவாரியான மக்களைச் சுரண்டியும், சூறையாடியும் சுக போகங்களில் கிடந்து இன்பக் கூத்தாடுகின்ற ஆளும் வர்க்கத்தார் ஏழைகளுக்கு ஆறுதல் சொல்கிறார்கள். "போன நாட்களில் செய்த பாவத்தின் பலனாக இன்று நீங்கள் துக்கம் அனுபவிக்கிறீர்கள். ஆகவே பாவம் செய்யாதீர்கள்! அப்படியென்றால் எங்களுக்கு இணங்கி நடவுங்கள். உங்களுடைய இரத்தத்தைக் குடிக்க எங்களை அனுமதியுங்கள்!"

பொருளாதார அடிமைத்தனத்திலும், கஷ்ட நிஷ்டூரங்களிலும் சிக்கித் திக்குமுக்காடுகிற அடிமைப்பட்ட வர்க்கத்தை நோக்கி பைபிளையும், குர்ஆனையும், பகவத் கீதையையும், தேவார திருவாசக திவ்யப்பிரபந்தங்களையும் கையில் பிடித்துக்கொண்டு பிற்போக்குப் புரோகிதர்கள் மத குருமார்கள் இதோபதேசம் செய்கிறார்கள்!

"ஆளும் வர்க்கத்தை எதிர்த்துக் கலகம் செய்வது பாவமாகும். "எல்லாம் ஈசன் செயல்" என்று சகித்துக் கொள்ளுங்கள். பொறுத்தவர் பூமி ஆள்வார். மரணத்திற்குப் பின் உங்களுக்குச் சொர்க்கம் நிச்சயம்."

மக்களுடைய இயக்கங்கள் முறுக்கேறும்பொழுது தொழிலாளிகளும் விவசாயிகளும் ஸ்தாபன ரீதியாகத் திரண்டு முன்னேறும் பொழுது ஆளும் வர்க்கத்தின் பொருளாதார நிலைமை உடைந்து நொறுங்கத் தொடங்கும் பொழுது மத நம்பிக்கைகளுக்கு முன்னர் எப்போதுமில்லாத முக்கியத்துவம் ஏற்படுகிறது. பேயைக் குழப்பம் பிடிக்கும் பொழுது அது தெய்வத்தைக் கட்டிப் பிடித்துக்கொள்கிறது. இந்து-முஸ்லிம்-கிறித்துவப் பிற்போக்காளர்களும்

மற்ற எல்லாப் பிற்போக்காளர்களும் பிரத்தியட்ச வாழ்வி லுள்ள தங்களுடைய சொத்துரிமைகளைக் காட்டிக் காக்கும் பொருட்டு தங்களுடைய குத்தகைகளும், லாபங்களும் பாங்கிக் கணக்குகளும் பறி போகாதிருக்கும் பொருட்டு மத நம்பிக்கைகளை உயர்த்திப் பிடிக்கிறார்கள். தங்களுடைய சுரண்டல் நிலைமையை மத நம்பிக்கை என்ற பட்டாடை களால் புனைந்து நிலை நிறுத்த அவர்கள் முயற்சி செய்கி றார்கள். முதலாளித்துவம் நிலப்பிரபுத்துவம் ஆகியவற்றின் லௌகீக உரிமைகளைப் பாதுகாக்கும் பொருட்டு யுத்தத்திற் கும் பாசிஸத்திற்கும் ஆதரவளிக்கும் பொருட்டு கூட்டுக் கொலைகளையும், இரத்த ஆறுகளையும் நியாயப்படுத்தும் பொருட்டு சுருக்கத்தில் மனிதத் தன்மையைத் தேய்க்கும் பொருட்டு அவர்கள் கடவுளின் உதவியை—அருளை நாடு கிறார்கள்.

பஜகோவிந்தப்பிரச்சாரகர்களே! பிற்போக்காளர்களே! உங்களுக்குக் கடவுளின் கருணைப் பிரவாகம் அவசியமே. காரணம் சொந்த பலத்தைக் கொண்டு உங்களால் அடிமைத்தனத்தையும் சுரண்டல் கொள்ளையையும் நிலை நிறுத்த முடியாத வண்ணம் நீங்கள் அவ்வளவு கையா லாகாத கபோதிகளாகி விட்டீர்கள்.

ஆனால் இன்றோ பொதுமக்கள் ஆதரவற்ற அனாதைகள் அல்ல. உங்களுடைய மிலேச்சத்தனமான அடக்கல் ஒடுக் கல் முறைகளுக்கு எதிராக அவர்கள், ஏறுநடை போட்டு முன்னேறிக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் ஊளையிட்டுக் கொள்ளுங்கள்! தொழிலாளிகளும் விவசாயிகளும் இதர நசுக்கப்பட்ட ஜனப்பகுதிகளும் தங்கள் தங்கள் கோரிக்கை களை அடையும் பொருட்டு நடத்தும் போராட்டங்களைப் பொருள்முதல்வாதமென்று நீங்கள்வசை கூறிக்கூச்சலிட்டுக் கொள்ளுங்கள்! ஆயினும் மக்களின் நரம்புகளில் அபின் குத்தியிறக்கி அவர்களை ஆதரவற்றவர்களாக்க உங்களிட முள்ள திவ்யமான ஆயுதம் வர வரக் கூர்மை மழுங்கி வருவது உங்கள் கண்களில் படவில்லையா!

எனக்கு உங்களுடைய அபின் தேவையில்லை. காரணம் அடக்கி ஒடுக்கப்பட்ட வர்க்கத்தாருடைய துன்பங்களையும் துயரங்களையும் நிலைநிறுத்த அல்ல—ஆனால் ஆளும் வர்க்கத்தாரின் மீத மிச்சம்கூட இல்லாத ஒரு புதிய சமுதாய அமைப்பைப் படைக்கவே நான் விரும்புகிறேன் அழகும் நிறைவும் கொண்ட ஒரு வாழ்வை-சுவர்க்கத்திலன்று, இந்த மாநிலத்திலேயே நிர்மாணிப்பதற்காகவே நான் பணி புரிகிறேன். எல்லாவிதமான அடக்கல்—ஒடுக்கல் அடிமைத்தனங்களையும், சுரண்டல் சூறையாட்டங்களையும் இந்தப் பூமண்டலத்திலிருந்து துடைத்து எறிந்துவிட்டு மனிதனுடைய சிறந்த இன்பத்திற்கும் வளர்ச்சிக்கும் இன்றியமையாத பௌதீகச் சூழ்நிலைகளையும் சாதனங்களையும் படைக்கவே நான் போராடுகிறேன். மனிதத் தன்மையின் மாண்புகளைக் காலடியில் தள்ளி மிதித்துத் துவைக்கும் எல்லாப் பிற்போக்குத் தீமைகளுக்கும் எதிரிடையான இந்த அறப் போரில் எனது பொருள் முதல் வாதமும் எனது நாத்திக வாதமும் எனக்கு மாபெரும் சக்தியையும் உணர்ச்சிப் பெருக்கையும் ஊட்டுகின்றன.

நான் ஒரு நாத்திகன். காரணம், நான் மனிதனை நேசிக்கிறேன்.

1-5-53

# ரஷ்யாவில் மத சுதந்திரம்

## மதவாதிகளுக்கும் நாத்திகர்களுக்கும் உரிமையுண்டு

''ரஷ்யாவா! அங்கே கடவுளும் கிடையாது. கர்த்தரும் கிடையாது. கோவிலும் கிடையாது, குளமும் கிடையாது. அங்கே மாதா கோவில்களையும், மசூதிகளையும் இடித்துத் தள்ளிவிட்டார்கள். மதவாதிகளையும் ஆத்திகர்களையும் செக்கில் போட்டு ஆட்டுகிறார்கள். ரஷ்யா நாத்திகர்களின் நரகம்!''"—இவ்வாறு திண்ணை தூங்கி வைதீகர்களிலிருந்து அமெரிக்க ஜனதிபதி ஐசன் ஹோவர் வரையில், சோவியத் யூனியன்மீது துவேஷாக்கினி மழை பொழிந்து கொண்டேயிருக்கிறார்கள். போப்பாண்டவரிலிருந்து நடுத்தெரு திருச்சபை உபதேசியார் வரையில், மத பக்தர்களின் ஒவ்வொரு வெளியீட்டிலும் சோவியத் நாட்டின் மத எதிர்ப்பைப் பற்றி ''வாய் புளித்ததோ, மாங்காய் புளித்ததோ" என்று அவதூறுப் பிரச்சாரம் நடத்திய வண்ணம் இருக்கிறார்கள்.

இதற்கு நேர் எதிர் துருவத்தில் நின்றுகொண்டு, அதிதீவிரக் 'கடவுள் இல்லை வாதிகளும்" அனுமார்ப் பாய்ச்சல் மத எதிர்ப்பாளர்களும் சோவியத் யூனியனை ஆத்திகத்தின் கல்லறையென்றும், நாத்திகத்தின் பொன்னுலகென்றும் இஷ்டம்போல் பிரச்சார பீரங்கியை முடுக்கி விடுகிறார்கள்.

பூஜ்யரான காண்டர்பரி பாதிரியார் ''ரஷ்யப் புரட்சியானது கடவுளைத் திரும்பக் கண்டுபிடித்ததாகும்" என்று மிக நிதானமாகச் சிறந்த மதஉணர்ச்சியுடன் அளந்து சொல்கிறார். எங்கள் கவி வேந்தன் பாரதியோ, ''மாகாளி பராசக்தி

கடைக்கண் வைத்தாளங்கே, ஆகாவென்றெழுந்தது பார் யுகப் புரட்சி" என்று நவம்பர் புரட்சியைக் கவிதாவேசத்தின் கொடுமுடியிலேற்றிக் காட்டுகிறுன். அது மட்டுமா! "கலி விழுந்தான்! கிருத யுகம் எழுந்தது!" என்று கண்டு ஆனந்தக் கூத்தாடுகின்றுன்! மகாகவி தாகூரோ, ரஷ்ய விவசாயி களைக் கிருஷ்ணனுடைய மக்களென்றும் பலராமனின் படை வரிசையென்றும் பகர்கிறுர்.

## மத சுதந்திரம்

ஆனல் அக்டோபர் புரட்சியின் (இது ரஷ்யப் பஞ்சாங் கப்படி) 36 வருட வரலாறு உலகத்தில் எந்த நாட்டிலும் எக்காலத்திலும் இல்லாத மத சுதந்திரம் சோவியத் யூனிய னில் நின்று நிலவுகிறது என்பதைத் தெக்கத் தெளிவாக்கு கிறது. ரஷ்யப் புரட்சியின் சகாப்தகரமான பற்பல சாதனைகளில் இந்தச் சாதனையும் ஒன்று என்பதை, யதார்த்த காய்தல் உவத்தலின்றி அங்கீகரிக்கிற ஒவ்வொரு மதவாதியும் மத எதிரியும் அங்கீகரிப்பான் என்பதில் ஐயமில்லை.

## அன்று எப்படி இருந்தது?

புரட்சிக்கு முற்கால ரஷ்யாவில் அதாவது 1917க்கு முந்திய ரஷ்யாவில் வைதீக கிறித்துவ மார்க்கம்தான் அரசாங்க மதமாக அதிகார ஆர்ப்பாட்டம் செய்தது. ஏனைய மார்க்கங்களெல்லாம் எமகண்டம் அரிகண்டங் களுக்கு இரையாயின அல்லது பெயரளவில் விட்டு வைக்கப் பட்டன. இஷ்டம்போல் எந்த மதத்தையும் தழுவ மக்க ளுக்கு உரிமையில்லை. வைதீக கிறித்துவ மார்க்கத்திற்கு மாறத் தடையில்லை. இதர மத மாறுதல்களுக்குத் தடை யிருந்தது.

கிறித்து மார்க்கத்திலிருந்து கிறித்துவமல்லாத மார்க் கத்தைத் தழுவுவது கடுமையாகத் தண்டிக்கப்பட்டது. நாத்திகம், அரசாங்கத்திற்கு விரோதமான கொடிய குற்ற

மாகக் கருதப்பட்டது. கிறித்து முறைப்படி மணம் புரிந்து கொள்ளாத மணமக்கள் தண்டிக்கப்பட்டனர். அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் 'சட்ட விரோதமான' குழந்தைகள்; அந்தக் குழந்தைகளுக்குப் பிரஜா உரிமை இல்லை.

ரஷ்ய வைதீக திருச்சபைக்கு வேறு சபைகளுக்கில்லாத தனிச்சலுகையும் யதேச்சாதிகாரமும் இருந்தது. ஜாரரசன் தான் இந்தத் திருச்சபையின் தலைவர் பெருமான். அரசாங்கத்தின் அடிப்படைச் சட்டங்களில், திருச்சபை ஜாரரசனுக்கு அடங்கிக் கிடந்த தன்மை எதிரொலித்தது. "கிறித்துவ மன்னராகிய சக்கரவர்த்திதான் திருச்சபையின் தலை சிறந்த காவலரும் புரவலருமாவார்" என்று மதச் சட்டம் முழங்கிற்று.

திருச்சபையின் உடைமையாகக் குபேரச் செல்வம்-தாவர சங்கமச் சொத்துகளாக மலையெனக் குவிந்து கிடந்தது. திருச்சபை மிகப் பெரிய முதலாளியாகவும், நிலப் பிரபுவாகவும் தொழிலாளர்களையும் விவசாயிகளையும் சுரண்டிக் கொழுத்தது. ஜார் அரசாங்கம் அதன் ஊழியர்களையும், பொதுமக்களையும் அடக்கி ஒடுக்க வைதீக திருச்சபையை உபயோகித்தது. மதத் தலைவர்களைப்போலீஸ் தலைவர்களாக உபயோகித்தது. பொதுமக்களுடைய அரசியல் போக்குகளைக் கண்காணிக்கும் பொறுப்பைப் புரோகிதர்களுக்கு அளித்தது.

## ஜாரின் இனத் துவேஷம்

இனத் துவேஷத்தை வளர்த்து, வைதீக திருச்சபையைச் சேராத எல்லைப்புறப் பிரதேச மக்களை வாட்டி வதைத்தது அரசாங்கம். உத்தியோகங்களிலும் சரி, பள்ளிக்கூடங்களிலும் சரி வைதிக திருச்சபையைத் தழுவியவர்களுக்கு ஒரு நீதி, மற்றவர்களுக்கு வேறொரு நீதி காட்டிற்று.

இவ்வாறு மத சுதந்திரமோ மனச்சாட்சிச் சுதந் திரமோ மருந்துக்குக்கூட ஜார் அரசாங்கத்தில் இருந்த தில்லை.

எனவே, ஜாரின் எதேச்சாதிகார ஆட்சியை எதிர்த்துப் போராடிய ரஷ்ய முற்போக்கு வாதிகள் மனச்சாட்சிச் சுதந் திரத்தையும் ஒரு கோரிக்கையாக வைத்தார்கள். அரசாங் கத்திலிருந்து திருச்சபையைப் பிரிக்க வேண்டும். திருச் சபையிலிருந்து பள்ளிக்கூடத்தைப் பிரிக்க வேண்டும். அதாவது மத சுதந்திரம் வேண்டுமென்று கோரினர்.

1833ல் ''தொழிலாளர் விடுதலைக் கழகம்"—அதுதான் அன்றைய மார்க்சிஸ்ட் குழு—நிறுவப்பட்டு, ''மனச்சாட் சிக்குத் தங்குதடையற்ற சுதந்திரம் வேண்டும்" என்றும், மத இன வேற்றுமை பாராட்டாது எல்லா மக்களுக்கும் பரிபூரண சம உரிமை வேண்டும் என்றும் கோரிக்கைகளை வைத்தது.

1902ல் லெனினுல் தயாரிக்கப்பட்ட ரஷ்ய சமூக ஜனநாயகக் கட்சியின் திட்டம், பால், மத, இன வேற் றுமை பாராட்டாது எஸ்டேட்கள் ஒழிக்கப்பட வேண்டு மென்றும், சமஉரிமை பரிபூரணமாக வழங்கப்பட வேண்டு மென்றும் கோரிற்று.

## இன்று எப்படி இருக்கிறது ?

அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சி ''அடிமைக்குத் தளை யில்லை. யாருமிப்போது அடிமையில்லை" என்ற சூழ்நிலை யைப் படைத்தது. சோவியத் யூனியனில் திருச்சபைக்கும் (மதத்திற்கும்) அரசாங்கத்திற்கும் இருந்த ஒட்டும் உறவும் அறுபட்டன.

1918ல் ஜனவரியில் சோவியத் அரசாங்கம், அரசாங் கத்திலிருந்து திருச்சபையும், திருச்சபையிலிருந்து பள்ளிக் கூடமும் பிரிக்கப்பட்டன என்று பறையறைவித்தது. மத

சுதந்திரப் பிரச்சினையும், மத ஸ்தாபனங்களின்பால் சோவியத் அரசாங்கத்தின் மனப்பான்மையும் அடியோடு பைசல் செய்யப்பட்டது.

அந்தப் பறைசாற்றின் முக்யாம்சங்கள் பின்வருவன:—

1. அரசாங்கத்திலிருந்து திருச்சபை பிரிக்கப்படுகிறது.

2. மனச்சாட்சியைப் பாதிக்கிற அல்லது தடைப்படுத்துகிற அல்லது குறிப்பிட்ட மத நம்பிக்கையின் அடிப்படையில் சலுகை வழங்குகிற சட்டங்கள் தடை செய்யப்படும்.

3. யாரும் எந்த மதத்தையும் பின்பற்றலாம். அல்லது பின்பற்றாதிருக்கலாம். குறிப்பிட்ட தொழுகையுடையவர் அல்லது தொழுகை நடத்தாதவர் என்ற அடிப்படையில் இருந்த சாதக, பாதக உரிமைகள் ஒழிக்கப்படும். பொது மக்களின் மதச்சார்பு பற்றிய குறிப்புகள் சர்க்கார் தஸ்தாவேஜுகளிலிருந்து நீக்கப்படும்.

4. அரசாங்க நடவடிக்கைகளிலும், அரசாங்கம் சம்பந்தப்பட்ட பொதுவான சமுதாய நடவடிக்கைகளிலும் சரி எவ்வித மதச் சடங்கும் அனுஷ்டிக்கப்பட மாட்டாது.

5. பொதுஜன அமைதியைப் பாதிக்காத வரையில் மற்றவர்களின் உரிமையில் குறுக்கிடாதவரையில் தங்களுடைய மதச் சடங்குகளை நடத்திக் கொள்ள ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

ஸ்தல அதிகாரிகள் இதில் தகுந்த பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வர்.

6. நாட்டுக்கும் அரசாங்கத்திற்கும் ஒவ்வொருவரும் செய்யவேண்டிய கடமையைத் தட்டிக் கழிக்க மத நம்பிக்கைகளைக் காட்டிச் சாக்குப்போக்கு சொல்லக்கூடாது.

இதற்கு விதிவிலக்கு வேண்டுமாயின் மக்கள் மன்றம் (Peoples Court) தீர்ப்புக் கூறும்.

7. மதத்தின் பேரால் நடைபெறும் சத்தியங்களும் ஆணைகளும் ஒழிக்கப்படும்.

8. சகல சமுதாயச் சடங்குகளும் சமுதாய அதிகாரிகளாலும் ஸ்தாபனங்களாலுமே நடத்தப்படும். மணச் சடங்கு, பிறந்த நாள் சடங்குகளை ரெஜிஸ்ட்ரேஷன் ஆபீஸ் நடத்தி வைக்கும்.

9. திருச்சபையிலிருந்து பள்ளிக்கூடம் பிரிக்கப்படும்.

10. எல்லா அரசாங்கப் பொதுப் பள்ளிக்கூடங்களிலும் தனிப்பட்ட பள்ளிக்கூடங்களிலும் மத போதனை ஒழிக்கப்படும்.

லெனின் 1905ல் திருச்சபையை அரசாங்கத்திலிருந்தும் பள்ளிக்கூடத்தைத் திருச்சபையிலிருந்தும் பிரிக்க வேண்டுமென்று கூறிய அறிவுரை சோவியத் ஆட்சியில் வெற்றிகரமாக அமுலாக்கப்பட்டது.

## வாய்ப்பும் வசதியும்

அரசாங்கத்திலிருந்து திருச்சபையைப் பிரிக்க வேண்டுமென்று ஏற்பட்டதால் ஜாராட்சியில் அரசாங்கத்தின் ஒரு அங்கமாகத் திகழ்ந்த ரஷ்ய வைதீக சபை விடுதலையடைந்து தனது முழுக் கவனத்தையும், மதப் பிரச்சினையிலேயே செலவிடும் வாய்ப்புக் கிடைத்தது.

அரசாங்கத்திலிருந்து திருச்சபை பிரிக்கப்பட்டதால், ஒவ்வொருவரும் மத ஸ்தாபனங்களில் கட்டாயம் அங்கம் வகிக்க வேண்டுமென்ற நிர்ப்பந்தத்திலிருந்து எல்லோருக்கும் விடுதலை கிடைத்தது.

அரசாங்கத்திலிருந்து திருச்சபை பிரிக்கப்பட்டதால் இதுவரை சர்க்கார் உதவிபெற்றுவந்த ரஷ்ய வைதீக திருச்சபைக்கு இனி அந்த உதவி கிடையாதென்றாகிவிட்டது.

இந்தப் பிரிவு புரோகிதர்களோ, அல்லது மத பக்தர்களோ நாட்டின் அரசியல் வாழ்வில் தீவிரமாகப் பங்கு கொள்வதற்கு முட்டுக்கட்டையாக இல்லை.

மதத்தை அடிப்படையாகக் கொண்டு சோவியத் பிரஜை யாருக்கும் எவ்விதத் தடையும் கிடையாது.

## தனிச் சலுகை கிடையாது

சோவியத் யூனியனிலுள்ள சகல மதங்களும் அரசாங்கத்தின் கண்ணில் சம உரிமை பெற்றன. எந்த மதத்திற்கும் எந்த தனிச் சலுகையும் கிடையாது. அதே பொழுதில் சோவியத் சட்டத்தை எந்த மதமும் மீறக்கூடாது.

நாத்திகர்களுக்கும், சம்சயவாதிகளுக்கும், பகுத்தறிவு வாதிகளுக்கும் அவரவர் கொள்கையைப் பிரச்சாரம் செய்வதற்குப் பரிபூரண உரிமையுண்டு.

இந்த மாதிரியான சூழ்நிலையில்தான் உண்மையான—சம்பிரதாயப்படி அல்லாத மத சுதந்திரம் சாத்தியமாகும் என்பதை எந்த நியாய புத்தியுள்ளவனும் குரோதமற்றவனும் ஒப்புக்கொள்ளுவான்.

இத்தகைய சுதந்திரம் கிடைத்ததால் இன்று பிரபல மத ஸ்தாபனங்களும் தங்கள் சொந்த முன் முயற்சியோடு சமாதான இயக்கத்தில் பங்கு கொள்கின்றன. உலக சமாதானத்திற்கான சோவியத் அரசாங்கத்தின் திட்டங்களை முழு மூச்சோடு, அமுல் நடத்தப் பாடுபடுவதோடு அதைத் தங்கள் மதக் கடமையாகவும் கொள்கின்றன.

மிகப் பிரபலமான மதத் தலைவர்களெல்லாம் சோவியத் யூனியனிலுள்ள பற்பல குடி அரசுகளிலும் நடைபெறும் சமாதான மாநாடுகளில் தீவிரமான பங்கெடுத்துக்கொள்கிறார்கள்.

அகில யூனியன் எவாங்கலிக்கல் கிறித்துவ ஸ்தாபனத்தின் தலைவரான ஒய். ஐ. ஷிட்கோவ் கூறினார் : ''மதவாதிகளாகிய எங்களுக்கு அக்டோபர் புரட்சியின் முக்கியத்துவம் என்னவென்றால், அது எல்லாவித மத ஸ்தாபனங்களுக்கும் சுதந்திரத்தைத் தேடித் தந்தது. இந்தப் புரட்சி சட்டத்தின் முன்னால் எல்லா மதங்களையும் சம உரிமையுடையதாகச் செய்து விட்டது. எந்தத் திருச்சபையும் இன்று ஆதிக்கமுடையதாக இல்லை. ஜாராட்சியில் சித்திரவதைக்கு இரையாகி நசுங்கிக் கிடந்த எல்லா மத ஸ்தாபனங்களுக்கும் அக்டோபர் புரட்சி விடுதலை அளித்திருக்கிறது. அவைகளின் சமுதாய நடப்பு, தொழுகை, சுதந்திரம் ஆகியவற்றிற்குரிய சகல உரிமைகளும் இன்று கிடைத்துள்ளன.''

## முஸ்லிம்கள் உரிமை

இதுபோல் 1951ல் பத்திரிகை நிருபர்களுக்குப் பேட்டியளித்தபோது டிரான்ஸ்காகேசியா முஸ்லிம் மத போர்டுத் தலைவராகிய ஷேக்உல் இஸ்லாம் ஆல்ஜாதே பின்வருமாறு கூறினார்: ''புரட்சிக்கு முன்னால் எங்கள் நாட்டு முஸ்லிம்கள் மதச் சித்திரவதைக்கு இரையானார்கள். இன்று சோவியத் யூனியனில் எல்லா மதங்களும் சம உரிமையை அனுபவிக்கின்றன. ஸ்டாலின் அரசியல் சட்டம் மத சுதந்திரத்திற்குப் பூரண உத்தரவாதம் அளிக்கிறது.

''காக்கஸஸிலும் மத்திய ஆசியாவிலுமுள்ள மசூதிகளும் மத ஸ்தாபனங்களும் சுதந்திரமாகச் செயல்படுகின்றன. சோவியத் அரசாங்கத்தின் கீழ் முஸ்லிம்கள் கல்வி, உண்மையான உயர்தரப் பண்பாடு இவற்றின் நற்பலனை நன்றாகத் துய்க்கிறார்கள்.

''சர்வ சாதாரணமான முஸ்லிம் தொழிலாளர், விவசாயிகளின் புதல்வர், புதல்விகள் சர்க்கார் அமைச்சர்கள், பாக்டரி டைரக்டர்கள், விஞ்ஞானக் கழக

நிர்வாகிகள் முதலிய பதவிகள் வகித்து அரசாங்க நிர்வாகத்தில் சிறந்த முறையில் பங்கு கொள்கிறார்கள்.''

எல்லா மதங்களும் சமம். மத அடிப்படையில் எந்த வேற்றுமையும் பாராட்டுவதில்லை. மதவாதியோ, நாத்திகனோ, பாக்டரியிலும், பள்ளிக்கூடத்திலும், பட்டாளத்திலும் சமமாகவே பாவிக்கப்படுகிறான்.

மத நம்பிக்கைக்காகச் சித்திரவதை செய்வதை, உரிமை பறிக்கப்படுவதைச் சோவியத் யூனியன் தடை செய்கிறது. மத உணர்ச்சியைப் புண்படுத்துவதையும் தடுக்கிறது. மத உணர்ச்சி விழாக்களில் குறுக்கிடுவதைக் கண்டிக்கிறது. தண்டிக்கிறது.

1936ம் வருடத்திய ஸ்டாலின் அரசியல் சட்டத்தின் நகல் திட்டத்தின் 124வது பிரிவுக்கு ஒரு திருத்தம் வந்தது. மதச் சடங்குகளைத் தடை செய்யவேண்டுமென்பது அந்தத் திருத்தம். ''நமது அரசியல் சட்டத்தின் அடிப்படைக் கருத்துக்கு விரோதமாக இருப்பதால் இதை நிராகரிக்க வேண்டும்'' என்று ஸ்டாலின் கூறினார்.

இவ்விதம், மதம் தனிப்பட்ட நபர்களின் சொந்த விஷயமாக்கப்பட்டது சோவியத் நாட்டில். அரசியலிலோ, பொருளாதாரத்திலோ, பள்ளிகளிலோ புரட்சிக்கு முன்னர் இருந்ததுபோல் மதத்திற்கு எவ்வித சம்பந்தமுமில்லாமல் செய்து இஷ்டப்பட்டவா, இஷ்டப்பட்ட மதத்தைத் தங்கு தடையின்றித் தழுவலாம் என்ற உரிமை அளிக்கப்பட்டது. அத்துடன் அவ்வித மத நம்பிக்கை விஞ்ஞானத்திற்கு விரோதமானது, பகுத்தறிவற்றது என எடுத்துக்காட்ட மத எதிர்ப்பாளர்களுக்கும் அங்கு உரிமை உண்டு.

8-11-53

# மதமும் மனித வாழ்வும்

இன்றைய வாழ்வில் சிலர் பலரைச் சூறையாடுகிறார்கள். ஜனத்தொகையில் விரல்விட்டு எண்ணக்கூடியவர்களான ஏகாதிபத்தியக் குபேரர்களும் நிலப்பிரபுக்களும் ஏகபோகப் பணதிபதிகளும் தொழிலாளி—விவசாயிப் பெருமக்களைக் கசக்கிப் பிழிந்து சாறெடுக்கிறார்கள். பொதுமக்கள் உலகம் ''லட்சுமி புத்திரர்''களின் காலடியில் லாப உற்பத்தி செய்யும் அடிமை உலகமாக மாறித் தவிக்கிறது.

பொருளாதார அடிமைத்தனம் அரசியல் அடிமைத்தனத்தையும் சமுதாய அவமதிப்பையும், கோடானுகோடி மக்களின் ஆத்மீக தார்மீக வாழ்வின் கொச்சைப்பாட்டையும் இருட்டடிப்பையும் பல்வேறு உருவங்களில் தவிர்க்க முடியாதபடி பெற்றெடுத்துப் பாலூட்டி வளர்க்கிறது. பொருளாதார விடுதலைப் போராட்டத்திற்குத் தேவையான அரசியல் உரிமை கொஞ்சநஞ்சம் தொழிலாளி விவசாயி மக்களுக்குக் கிடைக்கக் கூடும். ஆனால் இன்றைய ஏகாதிபத்தியப் பிடிப்பையும், நிலப்பிரபுத்துவ அமைப்பையும் ஏகபோக மூலதனத்தின் ஆதீனத்தையும் தூக்கியெறிந்தாலன்றி, வறுமை, வேலையின்மை, அடிமை ஆகிய சாபத்தீடுகளுக்குக் கழுவாய் காண முடியாது.

மதம் ஆத்மீக அடிமைத்தனத்தின் பல உருவங்களில் ஓர் உருவம். இது ஓய்வொழிவற்ற உழைப்பாலும், இல்லாமை என்கின்ற பொல்லாமையாலும், நிராதரவாலும் நசுக்குண்டு அலறும் பொது மக்களை எங்கும் எல்லாவிடத்தும் கொடுமையாக அழுத்துகிறது.

இம்மையில் சுரண்டல் கொள்ளைக்காரர்களை எதிர்த்துப் போராட முடியாத கையாலாகாத்தனம் சுரண்டப்படும் வர்க்கங்களுக்கு மறுமை நல்வாழ்வில் நம்பிக்கையை ஊட்டு கிறது. இயற்கையை எதிர்த்துப் போராட முடியாத கையாலாகாத்தனம் காட்டுமிராண்டிகளுக்குக் கடவுள்கள், பேய் பூதங்கள், அற்புதங்கள் ஆகியவைகளில் நம்பிக்கையை ஊட்டியது போல.

இம்மையில் அடக்க ஒடுக்கமாகவும், பொறுமையாகவும் வாழ்ந்தால் மறுமையில் உங்களுக்குச் சொர்க்க போகம் கிடைப்பது உறுதி என்று பாடுபட்டும் பலனடையாத பாட்டாளி மக்களுக்கு, மதம் இதோபதேசம் செய்து அவர்களுடையபோர்க் குணத்தையும்,வாழ்வுணர்ச்சியையும் மழுங்கடிக்கிறது. இம்மையில் தான தர்மங்களைச் செய்தால் மறுமையில் உங்களுக்குச் சொர்க்க போகம் கிடைப்பது உறுதி என்று கொள்ளைக்காரக் குபேரர்களுக்கு மதப் போதனை செய்து அவர்களுடைய சுரண்டல் கொள்ளை வாழ்வை நியாயப்படுத்துகிறது.

## நமது கருத்து

மதம் மக்களை மயக்கும் அபின். மதம் ஒரு தினுசான ஆத்மீகத் தெகடுதத்தம். இந்தத் தெகடுதத்தத்தில் மூலதனத்தின் அடிமைகள், நிலபலத்தின் எடுபிடிகள் அதாவது பாமரப் பொது மக்கள், மனிதனுடைய பிரதி மையை அதாவது மனித அந்தஸ்தோடு வாழ வேண்டு மென்ற வாழ்வுக் கோரிக்கையை மூழ்கடித்து விடுகிறார்கள்.

''சோஷலிஸமும் மதமும்'' என்ற கட்டுரையில் லெனின் கூறிய கருத்துக்களை மேலே கொடுத்துள்ளேன். இந்த மார்க்சிய - லெனினியக் கருத்து வெளிச்சத்தில் பார்த்தால் இரண்டு உண்மைகள் தெள்ளத் தெளியப் புலனாகும்.

1. பொருளாதார அடிமைத்தனம்தான் அடிப்படை சாபத்தீடு; அதிலிருந்துதான் அரசியல் அடிமைத்தனம்,

சமுதாய இழிவு, ஆத்மீக தார்மீக அடிமைத்தனம் ஆகியவை பிறக்கின்றன.

2. மதம் ஆத்மீக அடிமைத்தனத்தின் ஓர் உருவம். மதம் பாட்டாளிகளை மயக்கும் ஒரு அபின்; உடையவர்களின் கேடயம்.

இந்தக் கருத்துக்கள் உலகக் கம்யூனிச இயக்கத்தின் கருத்துக்கள். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் கருத்துக்களும் தமிழ்நாடு கம்யூனிஸ்ட்களின் கருத்துக்களும் இவைகளேதான். மதநம்பிக்கையும், கடவுள் நம்பிக்கையும்தான் அடிப்படையான சாபக்கேடுகள் என்று பிடிசாதனையாகத் திருப்பித் திருப்பிச் சொல்லப்படும்-எழுதப்படும் "திராவிட அறிவியக்கக் கருத்துக்கள்" மார்க்சிய-லெனினியக் கருத்துக்களுக்கு நேர்மாறானவை.

## கம்யூனிஸ்டுகளும் மதமும்

"தன்னுடைய அடிமைத் தனத்தை உணர்வு பூர்வமாகத் தெரிந்து விடுதலைப் போராட்டத்தில் ஈடுபாடு கொள்ளும் ஒரு அடிமை தன்னுடைய அடிமைத்தனத்தில் பாதியை அழித்து விட்டவனாகிறான்" என்கிறார் லெனின். நவீன பாக்டரி தொழில் முறையில் உருவாகிற வர்க்க உணர்ச்சி பெற்ற தொழிலாளி நகர வாழ்க்கையால் புதிய வெளிச்சம் பெறுகிற பாட்டாளி, நிலப்பிரபுத்துவ எதிர்ப்புப் போராட்டத்தில் முங்கி மூழ்கி ஜனநாயக உணர்ச்சிக் கூரேறிய விவசாயத் தொழிலாளி - வாரங் குத்தகைதார் மதக் குரோதங்களை வெறுப்புடன் உதறி எறிகிறான்; மோட்சத்தையும், சொர்க்கத்தையும் புரோகிதர்களுக்கும், நிலச்சுவான்தார், முதலாளி, மத வெறியர்களுக்கும் விட்டு விடுகிறான். இம்மையில் இங்கே நல்வாழ்வை நிலை நாட்டும் முயற்சியில் ஈடுபடுகிறான். இன்றைய நவீனப் பாட்டாளி சோஷலிஸ முகாமைத் தழுவுகிறான். கம்யூனிஸ்ட் கட்சி விஞ்ஞானத்தை ஆயுதமாகக் கொண்டு மத

போதையை எதிர்த்துப் போராடுகிறது; கம்யூனிஸ்டுக் கட்சி இவ்வுலகத்தில் நல்வாழ்வுக்காக இன்றே போராடும் பொருட்டுத் தொழிலாளிகளை விவசாயப் பெருமக்களை ஒன்று திரட்டுவதன் மூலமாக மறுஉலக நம்பிக்கையிலிருந்து அவர்களை விடுவிக்கிறது.

வாழ்க்கைப் போராட்டத்தில், வர்க்கப் போராட்டத்தில் ஒட்ட வைப்பதன் மூலம் பொது மக்களிடமிருந்து மதநம்பிக்கையைக் கழற்ற வேண்டும் என்கிறது லெனின் வழி. கருத்துப் பிரச்சாரத்தின் மூலம் மத ஒழிப்பு நடத்த முடியும் என்கிறது ''திராவிட-அறிவியக்க வீரர்" வழி.

இது இவ்வாறாக, திராவிட இயக்கத்தைச் சேர்ந்த சில 'அற்புத மூளைகள்' மார்க்ஸ், ஏங்கெல்ஸ், லெனின், ஸ்டாலின் ஆகிய உலக மகாமேதைகளின் மதம் பற்றிய சித்தாந்தத்தை உறுதியாகக் கடைப்பிடிப்பவர்கள் ''திராவிட இயக்க கம்யூனிஸ்டுகளே (பெரியார்-அண்ணாதுரை முதலியவர்களே) அன்றி கம்யூனிஸ்டுக் கட்சி கம்யூனிஸ்டுகளல்ல" என்று பட்டப்பகலை இருட்டாக்குகிறார்கள்.

## மதம் தனிப்பட்ட விவகாரம்

''மதத்தைத் தனிப்பட்ட விவகாரம் என்று பறைசாற்ற வேண்டும்'' என்று கூறுவதன் மூலம் கம்யூனிஸ்டுகள் மதத்தைப் பற்றிய தங்கள் மனப்பான்மையை வெளிப்படுத்துகிறார்கள். சர்க்காரைப் பொறுத்தமட்டில் மதம் தனிப்பட்டவர் விவகாரமாக வேண்டும் என்று கம்யூனிஸ்டுகள் கோருகிறார்கள். கட்சியைப் பொறுத்தமட்டில் அப்படிக் கருதக் கூடாது என்றும் கூறுகிறார்கள்.

சர்க்கார் மதச் சார்புடையதல்ல. சமய ஸ்தாபனங்களுக்கும் சர்க்கார் அதிகாரத்திற்கும் ஒரு தொடர்பும் இல்லை; ஆத்திகனாகவோ நாத்திகனாகவோ வாழ ஒவ்வொருவனுக்கும் பரிபூரண சுதந்திரம் உண்டு. மத வேற்றுமையை அடிப்படையாகக் கொண்டு மக்களிடம் பாகுபாடு காண்பது

அனுமதிக்கப்பட மாட்டாது. சர்க்காரின் தஸ்தாவேஜு களில் மதப் பெயர்களுக்கு இடமிராது. மத ஸ்தாபனங் களுக்குச் சர்க்கார் மான்யம் கிடையாது. இவ்வாறு 'சர்க் காருக்கும் சர்ச்சுக்கும் (மத ஸ்தாபனங்களுக்கு) இடையில் கல்விச் சாலைகளுக்கும், மதஸ்தாபனங்களுக்கும் இடையில் பரிபூரணப் பிரிவினை ஏற்படுத்தி முழுக்க முழுக்க நிபந்தனை யின்றி மதம் தனிப்பட்ட விவகாரம் என்று பறை சாற்ற வேண்டும்.' இது மதத்திற்கும் சர்க்காருக்கும் இருக்க வேண்டிய உறவைப் பற்றிய லெனின் கருத்து.

கம்யூனிஸ்ட் கட்சிக்கு மதம் தனிப்பட்ட விவகாரமல்ல. பாட்டாளி வர்க்க விடுதலைக்காகவும், அதன் மூலம் தேசத் தின் உண்மையான ஜனநாயக விடுதலைக்காகவும், போராடும் வர்க்க உணர்ச்சி கொண்டு முன்னேற்றத் தன்மை வாய்ந்த வீரர்களின் கட்சி-கம்யூனிஸ்ட் கட்சி. இத்தகைய கட்சி மத நம்பிக்கைகளின் உருவத்தில் காணப் படுகிற வர்க்க உணர்ச்சிக் குறைவு, அறியாமை அல்லது பாமரத்தன்மை ஆகியவற்றைப் பொறுத்தமட்டில் அலட்சியப் பான்மையோடு இருக்க முடியாது; இருக்கக் கூடாது.

மத போதையை வெற்றிகரமாக எதிர்த்துப் போராடும் விதத்தில் மத ஸ்தாபனங்களின் பிடிப்பை மாற்ற, கம்யூ னிஸ்டுகள் கொள்கைப் போராட்டம் நடத்தியாக வேண்டும். கம்யூனிஸ்டுகளுக்குக் கொள்கைப் போராட்ட மென்பது தனிப்பட்ட விவகாரமல்ல. பூராக் கட்சியின் விவகாரமாகும். ''அப்படியானால் எங்களுடைய கட்சித் திட்டத்தில் நாங்கள் நாத்திகர்கள் என்று ஏன் பிரகடனம் செய்யவில்லை? எங்கள் கட்சியில் சேர்வதிலிருந்து இந்துக் களையோ, கிறித்தவர்களையோ, முஸ்லிம்களையோ இதர கடவுள் நம்பிக்கையுடையவர்களையோ ஏன் தடுக்கவில்லை?

## அணுகுவது எப்படி?

இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்வதிலேயே மதப் பிரச்சினையை அணுகும் முறையில் கம்யூனிஸ்டுகளுக்கும்,

திராவிட இயக்கத்தாருக்கும் உள்ள மிக முக்கியமான வேற்றுமை விளக்கமாகும்.

எங்கள் திட்டம் முழுக்க முழுக்க விஞ்ஞானக் கண்ணோட்டத்தை அதாவது உலகாயத வாத உலகக் கண்ணோட்டத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். ஆகவே எங்களுடைய திட்ட விளக்கம் மத மயக்கத்தின் உண்மையான சரித்திர வேர்கள் பொருளாதார வேர்கள் எவை என்பதைப் பற்றிய விளக்கத்தையும் உட்கொண்டதாகும்.

கம்யூனிஸ்டுப் பிரச்சாரத்தில் நாத்திகப் பிரச்சாரம் விஞ்ஞான இலக்கிய வெளியீடு இவை அவசியம் அடங்கி இருக்க வேண்டும் என்கிறார் லெனின். பிரெஞ்சு நாட்டில் 18-வது நூற்றாண்டில் வாழ்ந்த பகுத்தறிவுவாதிகளின் இலக்கியங்களை ஜெர்மன் மொழியில் மொழி பெயர்த்து ஜெர்மன் மக்களிடம் பரப்ப வேண்டுமென்று ஜெர்மன் கம்யூனிஸ்டுகளுக்கு ஏங்கெல்ஸ் அறிவுரை வழங்கியதையும் லெனின் எடுத்துக் காட்டுகிறார்.

இந்தக் கருத்தைத் திராவிட இயக்கப் பகுத்தறிவு வாதிகள் தங்களுக்கு ஆதரவான கருத்தாகக் கொள்ளக் கூடும். ஆனால் அடுத்தாற்போல் லெனின் கூறும் கருத்துக்களைக் கவனியுங்கள்.

''எந்தச் சந்தர்ப்பத்திலும் மத எதிர்ப்பைத் தத்துவ ரீதியாக லட்சிய ரீதியாக வர்க்கப் போராட்டத்திற்கு வெளியில் நடைபெறும், பகுத்தறிவுப் போராட்டமாகக் கையாளும் தவறைச் செய்யக் கூடாது. தீவிர ஜனநாயக வாதிகள் இந்தத் தவறைத்தான் அடுத்தடுத்துச் செய்தார்கள். பாட்டாளி மக்களை எல்லையில்லாத அடக்கல் ஒடுக்கல் கொடுமைக்கும் இழிவுக்கும் இரையாக்கும் ஒரு சமுதாயத்தில் வெறும் கருத்துப் பிரச்சாரத்தால் மட்டும் மதக் குரோதங்களை ஒழித்துவிட முடியும் என்று கருதுவது வடிகட்டின அசம்பாவிதமாகும்.

சமுதாயத்தில் காணப்படும் பொருளாதார அடிமைத் தனத்தின் பலனும் எதிரொலியும்தான் மனித வர்க்கத்தை ஆழ அழுத்திக் கொண்டிருக்கும் மத அடிமைத்தனம் என்பதை மறந்து விடுவது முதலாளித்துவக் குறுகிய மனப்பான்மையின் குணம்—முதலாளித்துவத்தின் இருண்ட சக்திகளை எதிர்த்துப் போராடும் போராட்டத்தில் அறிவு வெளிச்சம் பெருத பாட்டாளி வர்க்கத்தை எத்தகைய நூற்களாலும், கருத்துப் பிரச்சாரத்தாலும் அறிவு வெளிச்சம் பெறச் செய்ய முடியாது. பூத உலக சொர்க்கத்திற்காகப் பாட்டாளி வர்க்கம் தொடுக்கும் இந்தப் புரட்சிப் போராட்ட ஒற்றுமை மேலுலக சொர்க்கத்தைப் பற்றிப் பாட்டாளி வர்க்கத்திடம் உண்டு பண்ணும் கருத்தொற்றுமையை விட நமக்கு மிகமிக முக்கியமானது.

''இதனுல்தான் நமது நாத்திகத்தை நமது திட்டத்தில் பொறிக்கவில்லை. இதனுல்தான் மத நம்பிக்கையுள்ள பாட்டாளிகள் நமது கட்சியில் சேர்வதைத் தடுக்கவில்லை."

''நாம் எப்பொழுதும் விஞ்ஞானக் கண்ணேட்டத்தையே கடைப்பிடிக்க வேண்டும். சில பல கிறித்தவர்களின் முன்னுக்குப் பின் முரணுன போக்கை நாம் எதிர்த்துப் போராட வேண்டியது அவசியம். ஆனுல் இவ்வாறு போராடுவது மத எதிர்ப்புக்கு முதலிடம் கொடுக்க வேண்டுமென்று ஒரு நாளும் அர்த்தமாகாது. பொருளாதார வளர்ச்சிப் போக்கில் குப்பை கூளங்களாகிப் போன அரசியல் முக்கியத்துவத்தைப் பெற்றுவிட்ட மூன்ருந்தரக்கருத்துக்கள் அல்லது அர்த்தமற்ற கருத்துக்கள் உண்மையான புரட்சிகரமான பொருளாதார அரசியல் போராட்டத்தைப் பிளவு உண்டு பண்ண அனுமதிக்கக் கூடாது."

## லெனின் கண்டிக்கிருர்

லெனினுடைய கருத்துப்படி தி.க., தி.மு.க. வினர் வர்க்கப் போராட்டத்திற்கு வெளியில் 'பகுத்தறிவு'ப்

போராட்டத்தை நடத்துகிறார்கள். எனவே அவர்களுடைய பாதை தவறான பாதை. லெனின் கூறும் தீவிர 'ஜனநாயக வாதிகள்' தான் தமிழகத்தில் திராவிட இயக்கத்தினர்.

''வெறும் கருத்துப் பிரச்சாரத்தால் மட்டும் மதநம்பிக்கைகளை ஒழித்துவிட முடியும் என்று கருதுவது வடிகட்டின அசம்பாவிதம்'' என்ற லெனின் மொழியைப் பகுத்தறிவுச் சாணையில் வைத்துத் தீட்டிப் பாருங்கள் என்று திராவிட இயக்கத்தை அழைக்கின்றேன்.

மத எதிர்ப்பைப் பொறுத்தமட்டில் ''முதலாளித்துவக் குறுகிய மனப்பான்மையின் குணம்'' என்று லெனின் குறிப்பிடுகிறாரே அந்த ''அரிய குணம்" திராவிட இயக்கத் தலைவர்களை அட்டை போல் ஒட்டிக் கொண்டிருக்கிறது.

## தி. க., தி. மு. க. போக்கு

இந்தியாவிலும் சரி, தமிழகத்திலும் சரி, லெனின் பாதையில் சென்று வர்க்கப் போராட்டத்தின் மூலம் பாட்டாளி மக்கள் அறிவு வெளிச்சம் பெற்று வருகிறார்கள். வர்க்கப் போராட்டத்தை எதிர்த்துப் பாட்டாளி வர்க்கக் கொள்கையை நையாண்டி பண்ணிக் கருத்துப் பிரச்சாரத்தின் மூலம் உலகை ஒளிமயமாக்க 'திராவிடப் பாணி'யில் கலை வளர்க்கிறார்கள் 'திராவிட அறிவியக்கத்தார்!'

பூவுலக சொர்க்கத்திற்காகப் புரட்சிப் போராட்ட ஒற்றுமையை உயர்த்துகிறார் லெனின். அவர் வழியைக் கடைப்பிடிக்கிறார்கள் கம்யூனிஸ்டுக் கட்சியினர். மேலுலக சொர்க்க எதிர்ப்பில், 'கருத்தொற்றுமை'யைத் திரட்ட தங்கள் தனித் திறமைகளையெல்லாம் நூற்று வீதம் காட்டுகின்றனர், 'அறிவியக்க முன்னணி!'

'ஆரியன் - திராவிடன்', 'வடவன் - தென்னவன்', 'பிள்ளையார் உடைப்பு', 'இராமர் உடைப்பு' இன்னபிற

திராவிட இயக்கக் கருத்துக்கள் லெனின் கூறுவதுபோல், ''உண்மையான, புரட்சிகரமான பொருளாதார, அரசியல் போராட்டத்தைப் பிளவுண்டுபண்ணும் ''மூன்றுந்தரக் கருத்துக்கள்" அல்லவா என்பதைத் திராவிட இயக்க அணிகளும் தமிழ் மக்களும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

''மதப் போராட்டத்தில் பொதுமக்கள் கவனத்தைத் திருப்பிவிட்டு உண்மையான முதல் தரமான அடிப்படையான பொருளாதார அரசியல் போராட்டத்திலிருந்து பொது மக்கள் கவனத்தை மாற்றச் சூது செய்வது" பிற்போக்கு முதலாளி—நிலப் பிரபுக்களின் வேலை என்கிறார் லெனின். பெரியார் பிள்ளையார் பொம்மையை உடைக்கிறார். "பிள்ளையார் பொம்மையை உடைக்க அழைக்கிறார் ஒரு தி மு.க. கலைஞர்." இராமன்-சீதை விவகாரம் ராஜாஜி ஈ.வே.ரா. முகாம்களாகப் பிரிந்து மோதுகிறது. 'ஒன்றே குலம்' என்று கூறிக்கொண்டு 'திராவிட நாட்டில்' வர்க்கப் போராட்டத்தை மூழ்கடித்து மறைக்கப் பார்ப்பதும் 'ஒருவனே தேவன்' என்ற முழக்கொலியோடு, ''மத எதிர்ப்புப் பகுத்தறிவுப் பிரச்சாரம்' முழங்குவதும் நன்கு நடைபெறுகிறது! இந்த வேலைகள், பொதுமக்களைப் பயங்கரச் சுரண்டலில் ஆழ்த்தும் பிற்போக்குச் சக்திகளின் சதித்திட்டத்திற்குத் துணை போகுமா போகாதா என்பதை லெனின் வெளிச்சத்தில் சிந்தித்தல் தமிழ் மக்கள் கடமை.

## கம்யூனிஸ்டுகள் கடமை

மதத்தின் பேராலும், மத எதிர்ப்பின் பேராலும் இரண்டாந்தர மூன்றுந்தர வேற்றுமைகளுக்குத் தூபமிடும் போக்குகளை எதிர்த்துப் பாட்டாளி மக்கள் ஒற்றுமைக்காகவும் விஞ்ஞான உலகக் கண்ணோட்டத்திற்காகவும் அமைதியாகவும் முன்பின் முரணின்றியும், சகிப்புத்தன்மையோடும் கம்யூனிஸ்டுகள் பிரச்சாரம் செய்ய வேண்டும் என்கிறார் லெனின்.

கம்யூனிஸ்டுக் கட்சி, சர்க்காரைப் பொறுத்த மட்டில் மதத்தை உண்மையான தனிப்பட்ட விவகாரமாகச் செய்ய

இடையருது பாடுபட வேண்டும். இத்தகைய அரசியல் அமைப்பின் மூலம் மத்திய கால ஏற்பாடுகளை முற்றும் துடைத்துச் சுத்தம் செய்து மனித வர்க்கத்தின் மத மௌட்டிகத்திற்கு உண்மைக் காரணமான பொருளாதார அடிமைத்தனத்தை வேரோடு கெல்லி எறிய விரிவான வெளிப்படையான போராட்டத்தை நடத்த வேண்டும் என்கிருர் லெனின்.

நவம்பர் புரட்சி லெனின் வழியில் மகத்தான வெற்றி பெற்றிருக்கிறது. சோவியத் யூனியனில் மத சுதந்திரத்திற்குப் பரிபூரணப் பாதுகாப்பு இருக்கிறது. ஆயிரக்கணக்கான மாதா கோவில்களும், மசூதிகளும் அங்கே இருக்கின்றன. அவற்றில் தொழுகை நன்கு நடைபெறுகிறது. அதே பொழுதில் விஞ்ஞான உலகக் கண்ணேட்டத்துடன் வாழ்க்கை நடத்தும் கோடானு கோடி மக்களும் அந்த நாட்டில்தான் பூலோக சொர்க்கத்தை நிர்மாணிக்கிருர்கள். கிழக்கு ஐரோப்பிய நாடுகளும், குடியரசுச் சீனமும் லெனின் வழியைப் பின்பற்றி மேன்மேலும் மதத்தின் தேவையைத் தாண்டி வளர்ந்து புதிய வாழ்வை உருவாக்கிக் கொண்டிருக்கின்றன.

உலகப் பொது விதி தமிழனுக்கும்தான்.

7-11-54

# கம்யூனிஸ்டுகளும் மதமும்

கம்யூனிஸ்டுகளின் மதம் பற்றிய கொள்கைக்குத் தமிழ கத்தில் இரண்டு முனைகளிலிருந்து தாக்குதல் வருகிறது.

ஒரு முனையில் மதவாதிகளான சங்கராச்சாரிகளும், மகா சந்நிதானங்களும், ஜீயர் பிரான்களும், மௌல்விகளும், பாதிரிமார்களும், நவீன ஆழ்வார்களும், நூதன நாயன் மார்களும், பஜகோவிந்தப் பக்தர்களும் நின்று கொண்டு கம்யூனிஸ்டுகளின் மதக் கொள்கையின் மீது பாணம் தொடுக்கிறார்கள். ''சாமியில்லை, சாத்தானில்லை, கோவில் இல்லை, குளம் இல்லை என்பவர்கள் கம்யூனிஸ்டுகள்; கம்யூ னிஸ்டுகள் படு நாத்திகர்கள், படு மத விரோதிகள், அவர்கள் திரியும் திசையையும் திரும்பிப் பாராதீர்கள்'' என்றுபக்த கோடிகளுக்கும்,பொது மக்களுக்கும் எச்சரிக்கை விடுகிறார்கள்.

வைதீக அழுகற் பழங்களும், மடத்தாண்டிகளும் கூட கம்யூனிஸ்டுகளின் மதக் கொள்கையை வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ என்று கடுந்தாக்குத் தாக்கு கிறார்கள்.

## பதில் சொல்லுகிறோம்

மற்றொரு முனையில் 'மத எதிரி'களான திராவிட இயக்கத்தார் நின்று கொண்டு கம்யூனிஸ்டுகளின் மதக் கொள்கையை எதிர்த்துப் போர் தொடுக்கிறார்கள். ''சுய மரியாதை சுப்ரதீபங்கள்'' என்று சுயவிளம்பர ஒலிபெருக் கும் தி.மு.க. தலைமையினர் இந்தத் தாக்குதலில் பாசறை வகுத்துப் பரணிபாடி முன்னணியில் நிற்கின்றனர். இந்தியக்

கம்யூனிஸ்டுகள் மதத்தைப் பொறுத்தமட்டில் ''மார்க்சிய ஞான சூன்யர்கள்'' என்றும் மதத்தை வெட்டி வீழ்த்து வதில் 'புரட்சிக் கோழைகள்', 'சந்தர்ப்பவாதிகள்' என்றும் கனஜோராகக் கண்டனக் கோடரியைப் பாய்ச்சுகிறார்கள்.

மதமொழிப்பில் தாமே தமக்கு நிகரென்னும் தி.மு.க. தலைமையினர் இத்துறையில் கம்யூனிஸ்டுகள் மீது அவதூறுச் சகதியை வீசுவதில் ''சித்தம் போக்கு சிவம் போக்கு'' என்ற மனப்பாங்குடன் தங்கள் பிரச்சார பீரங்கிகளை முடுக்கி விடுகிறார்கள்.

இந்தத் தொடர் கட்டுரையில் கம்யூனிஸ்டுகளின் மதக் கொள்கையை எதிர்க்கும் ''மத விரோதி''களான தி.மு.க. தலைமைக்குப் பதில் சொல்ல விரும்புகிறோம். இதில் அவர்கள் கிளப்பும் முக்கியமான மறுப்புகளுக்கு மறுப்புக் கூற மட்டுமே விரும்புகிறோம். முதன் முதலில் அவர்கள் எழுப்பும் சித்தாந்த ரீதியான ஆட்சேபணைகளுக்குப் பதில் சொல்ல விரும்புகிறோம்.

## மார்க்ஸியமும்—தி.மு.க.வும்

தி.மு.க. ஏடுகள் கூறுவதென்ன?

1. ''மார்க்ஸ், ஏங்கெல்ஸ், லெனின், ஸ்டாலின் ஆகிய கம்யூனிஸ்டு இயக்க உலகத் தலைவர்கள் வகுத்த மதம் பற்றிய சித்தாந்தத்தை இந்தியக் கம்யூனிஸ்டுகள் (குறிப்பாகத் தமிழக கம்யூனிஸ்டுகள்) பின்பற்றவில்லை. நாங்கள் பின்பற்றுகிறோம். எனவே இந்தியத் துணைக்கண்டத்திலுள்ள கம்யூனிஸ்டுகள் உண்மைப் பொது உடைமை வாதிகளல்ல. திராவிட முன்னேற்றக் கழகமே உண்மையான பொது உடைமைத் தத்துவத்தை மலரச் செய்யும் மகத்தான சக்தி.

2. நாத்திகக் கருத்துப் பிரச்சாரமும் மதமொழிப்பு அறிவியக்கப் போராட்டமும்தான் லெனின், ஸ்டாலின்

அடிச்சுவட்டைப் பின்பற்றிச் செயலாற்றும் புரட்சிப் பணிகளாகும்.

3. முதலாளி வர்க்கம் தங்களுடைய சுரண்டல் கொள்கையை நடத்த எளிதான ஆயுதங்களாகப் பயன்படுத்தும் மதத்தையும், மத ஸ்தாபனங்களையும், கோவில்களையும் அழித்தொழித்தால்தான் விஞ்ஞானப் பூர்வமான பொது உடைமை நிலை பெற முடியும் என்பது மார்க்சியத்தின் உண்மைச் சித்தாந்தம்.

4. ஏழைப் பாட்டாளி வர்க்கத்தின் நலனில் அக்கறை கொண்டுள்ள ஏழைகள் கட்சியானது மதத்தையும் மத மூடப் பழக்க வழக்கங்களையும் சுட்டுப் பொசுக்கினாலொழிய வெற்றி காணமுடியாது.

மேற்கூறிய உண்மைகளை தி.மு.க. தலைவர்கள் 'தத்துவ ஞானிகள்' மார்க்சியத்தை ஆழ்ந்து ஆராய்ந்ததின் விளைவாக ஏற்பட்டு முடிந்த முடிவுகள் என்று நாம் கருதலாம். அண்ணாத்துரையின் 'அறிவுச் சுடரி'லிருந்து, திராவிடன், தென்றல், தீச்சுடர் வரையில் தி.மு.க. இதழ்கள் அனைத்திலும் கம்யூனிஸ்டுகளின் மதக் கொள்கைக்கு எதிரிடையாக அடிக்கடி அடிபடும் மணி மகுடக் கருத்துக்களாகவும் இவைகள் திகழ்கின்றன.

மேற்படிக் கருத்துக்களில் மார்க்சிய சித்தாந்தம் 'நாத்திகம்' 'மதமொழிப்புப் போராட்டம்', கம்யூனிஸ்டுக் கட்சி ஆகியவை பற்றிய தி.மு.க. தலைமையின் நிர்ணயிப்பு பொதிந்து கிடக்கிறது. எனவே, இந்தக் கருத்துக்களை மார்க்சிய வெளிச்சத்தில் அலசிப்பார்க்க வேண்டியது நமது கடமை. அப்பொழுதுதான் தி.மு.க. கம்யூனிஸ்டுக் கட்சி ஆகியவற்றின் மார்க்சியம் பற்றிய தரத்தையும் தன்மையையும் தமிழ் மக்கள் அறிந்து ஒப்பு நோக்கி உண்மை காண வாய்ப்புக் கிடைக்கும்.

## மார்க்ஸியத் தலைவர்கள் வரையறுப்பதென்ன?

"விஞ்ஞான சோஷலிசத்தை அதாவது மார்ச்சியத்தை ஆதார பீடமாகக் கொண்டே கம்யூனிஸ்ட் கட்சி தனது தத்துவ ஞானக் கட்டடம் முழுவதையும் உருவாக்கி இருக்கிறது. இயக்குவியல் லோகாயத வாதம் (Dialectical Materialism) மார்ச்சியத்தின் தத்துவஞான அஸ்திவாரம் என்று மார்க்ஸும் ஏங்கெல்ஸும் பறைசாற்றுகிறார்கள்."

—இவ்வாறு லெனின் 'மதத்தைப் பற்றிய கம்யூனிஸ்ட் கட்சி மனப்பான்மை' என்ற நிகரற்ற கட்டுரையில் எடுத்த எடுப்பிலேயே ஆணித்தரமாகக் கூறுகிறார். பொருள்கள் ஒன்றோடொன்று எவ்வாறு இணைந்திருக்கின்றன, எவ்வாறு வளர்ந்தும் மாறுதல் அடைந்தும் வருகின்றன என்பனவற்றை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அல்லாத வரையில் பொருள்களைப் பிசகற்ற முறையில் துல்லியமாக நாம் புரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால் மற்றப் பொருள்களோடு இணைக்கப்படாத பொருள் ஒன்றுகூட உலகத்தில் இல்லை. அன்றிருந்த மேனி அழியாமலும், மாறாமலும் இருக்கிற பொருளும் ஒன்றுகூட இல்லை. ஒவ்வொரு பொருளும் இடையறாது தொடர்ந்து மாறிக் கொண்டும் இயங்கிக் கொண்டுமே இருக்கிறது.

இயற்கை, சமுதாயம் ஆகியவை முழுவதிலும் எதிரும் புதிருமான முரண்பட்ட போக்குகள் எழுகின்றன; இவற்றின் போராட்டம் மாறுதலிலும் வளர்ச்சியிலும் முடிகிறது. இந்த முரண்பாடுகளையும், முரண்பாடுகளின் மோதல்களையும், மோதல்களின் முடிவுகளையும் கருத்தூன்றிக் கவனிக்க வேண்டும். ஏனென்றால் எல்லாவித வளர்ச்சியிலும் வளர்ச்சியின் படிப்படியான மாறுபாடு (அளவு மாறுபாடு) ஏதாவதொரு புதிய பொருளில் (வளர்ச்சியின் புதிய கட்டத்தில் குண மாறுபாட்டில்) முடிகிறது.

உலகத்தில் காணப்படும் சகல அசைவுகளுக்கும் இயக்கங்களுக்கும், இயக்கங்களின் மாறுதல்களுக்கும் இந்த

பௌதிக உலகமே மூல காரணம், ''கடந்து நிற்கும்'' ''ஆத்மீக முழுமுதல் பொருள்'' அல்ல. ஏனென்றால் உலகத்தின் இயற்கையான தன்மையே பௌதீகத் தன்மைதான். முதலாவது ஜடப் பொருள். இரண்டாவதுதான் ஆத்மா, மனம், சிந்தனை இத்யாதி.

இதுதான் இயக்குவியல் லோகாயத வாதம். மனித வர்க்கத்தின் விடுதலைக்காக மார்க்ஸ், ஏங்கெல்ஸ் ஆகிய இரு மகா மேதைகளும் கண்டருளிய தத்துவ ஞானம்.

## தி.மு.க. வுக்குத் தத்துவம் உண்டா ?

திராவிட முன்னேற்றக் கழகம் என்றேனும் இந்த இயக்குவியல் லோகாயதவாதத்தைத் தனது தத்துவஞான அஸ்திவாரமாகக் கொண்டதுண்டா? இல்லை. வேண்டாம். தி. மு. க. வுக்கு ஏதேனுமொரு தத்துவ ஞான அடிப்படையாவது உண்டா? அதன் தலைமையால் தெளிவாக வரையறுக்கப்பட்டதென்றோ, அதன் மாநில மாநாடுகளில் வகுக்கப்பட்டது என்றோ இன்றுவரை தமிழ் மக்களின் முன் ஏதாவதொரு தத்துவ ஞானம் வைக்கப்பட்டதுண்டா? இல்லவே இல்லை.

மாறாக, ஒவ்வொரு நாட்டுக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும்—இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும்தான்—அதன் தத்துவ ஞான அஸ்திவாரம் இயக்குவியல் லோகாயதவாதம் என்பது உலகறிந்த உண்மை.

18வது நூற்றாண்டில் பிரான்சிலும், 17வது நூற்றாண்டின் முற்பகுதியில் ஜெர்மனியிலும் லோகாயதவாதம் தலை தூக்கி நின்றது. இந்த லோகாயதவாதம் அடி முதல் முடி வரை நாத்திகத் தன்மையும், எல்லா மதங்களையும் திட்டவட்டமாக எதிர்க்கும் தன்மையும் உடையது. மார்க்சும், ஏங்கெல்ஸும் உருவாக்கியது இயக்குவியல் லோகாயத வாதம். இந்த லோகாயத வாதத்தின் சரித்திர வேர்களை

ரூபாய்க்குப் பதினாறு அணா திட்டம் பரிபூரணமாக ஏற்றுக் கொள்கிறது.

## அன்று எங்கே?

ஆனால் 'பகுத்தறிவுப் பாசறை' என்று தன்னைத் தானே பெருமை முழக்கம் செய்துகொள்ளும் தி.மு.க. வோ, 'சுய மரியாதை' இயக்கம், தமிழகத்தில் தனது ஆரம்பப் பத்தாண்டு வளர்ச்சியின் உருவாக்கமாக மலர்ந்து, 1933-34ல் தோன்றிய 'பகிரங்க நாத்திக இயக்கத்தின்' அடிப்படைக் கருத்துக்களைக் கூட ஏற்றுக் கொள்ளத் தொடை நடுங்கி பின்னடித்திருக்கிறது; அன்று சிங்காரவேலர் தலைமையில் பகிரங்க நாத்திக இயக்கம் (மார்க்சியப் பார்வையில் குறை பாடுடையதாயினும்) நடந்த காலத்தில் அண்ணாத்துரை அந்த முகாமின் அருகாமையில்கூட நடமாடினதில்லை. ஈ. வே. ராவோ 1935 ஆரம்பத்திலேயே, "சுயமரியாதை இயக்கம் அவமரியாதை இயக்கமாகி விட்டது" என்ற சிங்காரவேலரின் பழிப்புக்கு இரையாகி விட்டார்.

## மத ஒழிப்பா இது?

திராவிட இயக்கத்தின் இன்றைய கோஷமென்ன? "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்பது. இது மார்க்சிய கோஷமா? அல்ல. லோகாயதவாத கோஷமா? அல்ல. பகுத்தறிவுவாத கோஷமா? அல்ல. இது சைவ சித்தாந்த திருமூல முனிவரின் "திருமந்திர" கோஷம்.

மார்க்சியத் தத்துவ ஞானத்தைப் பற்றிய தலை சிறந்த நூல் "டூரிங்-எதிர்ப்பு" (Anti-Duhring) என்ற நூல். இதை ஏங்கெல்ஸ் எழுதினார்; மார்க்ஸ் சரிபார்த்தார். இந்த நூல் தன்னை மிகப் பெரிய "லோகாயதவாதியாகவும் நாத்திகனாகவும்" பாவித்துக்கொண்ட டூரிங் என்ற பேராசிரியரைக் கூர்மையாக நையாண்டி பண்ணிக் கண்டிக்கிறது. முன்பின் முரணற்ற லோகாயதவாதியாக விளங்கினார் என்பதற்காகக் கண்டிக்கவில்லை. தனது லோகாயதவாதத்தில் ஓட்டைகளை

யும், பொத்தல்களையும் விட்டு வைத்ததன் மூலம் மதத்திற்கும் மதத் தத்துவத்திற்கும் இடங் கொடுத்தார் என்பதற்காகவே கண்டிக்கிறது. இதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

'லட்விக் பூர்பாக்' என்று ஏங்கெல்ஸ் மற்றொரு தத்துவ ஞான நூல் எழுதியிருக்கிறார். இது மார்க்ஸ் ஏங்கெல்ஸ் இருவருக்கும் லோகாயதவாதத்தில் முன்னோடியாகத் திகழ்ந்த பூர்பாக் என்ற அறிஞரின் தத்துவத்தைப் பற்றிய விமர்சன நூல் ஆகும், பேர்போன ஜெர்மன் லோகாயதவாதியான பூர்பாக் மதத்தை ஒழிப்பதற்காக மதத்தை எதிர்த்துப் போராடவில்லை. மதத்திற்குப் புத்துயிர் கொடுப்பதற்காகவே புதியதொரு சிறந்த மதத்தைச் சிருஷ்டிப்பதற்காகவே மத எதிர்ப்புப் போராட்டம் நடத்தினார். இந்தப் போக்கை, ஏங்கெல்ஸ் தமது நூலில் வன்மையாகக் கண்டிக்கிறார். இதையும் நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

## மதத்துக்குப் புத்துயிர் ஊட்டுகிறது தி. மு. க.

மேற் சொன்ன இரண்டு நூல்களின் மூலம் மார்க்ஸும் ஏங்கெல்ஸும் நமக்குப் போதிப்பது என்ன?

மதமும் மதத் தத்துவமும் நுழைந்து உயிர் வாழ இடம் கொடுக்கிற தத்துவச் சந்து பொந்துகளைக் கொண்ட லோகாயதவாதத்தையோ நாத்திகத்தையோ, மத எதிர்ப்பையோ அவற்றின் ஆடை ஆபரண அலங்கார ஆர்ப்பாட்டத்தைக் கண்டு மயங்கி ஆதரிக்கக்கூடாது. முன்பின் முரணற்ற லோகாயதவாதத்தின் வெற்றிக்காகத் தொடர்ந்து போராட வேண்டும். மத எதிர்ப்பின் பேரால் மதத்திற்குப் புதிய ஜீவன் பெய்ய அனுமதிக்கக்கூடாது. மத எதிர்ப்பின் பேரால் புதுமத 'பிரம்மாக்கள்' அவதாரம் செய்யவும் இடம் கொடுக்கக் கூடாது.

தி. மு. க.வின் "ஒருவனே தேவன்" என்ற கோஷத்தில் மத மயக்கத்தின் அத்தனை அசுர குணங்களும் சதிராட இட

முண்டு. ''அன்பே கடவுள், அறமே அபிஷேகம்'' என்று தி. மு. க. பொதுச் செயலாளரால் புது மெருகிடப்பட்ட பழைய மதம் திரைப்படத்தில் ஓடுகிறது. ''கடவுளைத் தேடி அலைகிறவர்களில் எங்களை யாரும் மிஞ்ச முடியாது'' என்கிறார் அண்ணாத்துரை. 'சொர்க்கவாசல்' படத்தில் மட்டுமென்ன? அதற்கு முன்பு 'வேலைக்காரி' படத்தில்கூட 'ஒருவனே தேவன்' கொள்கையை நிலைநிறுத்தியிருக்கிறார் 'அண்ணா' என்று ஒரு தம்பி பகுத்தறிவு வாதம் பேசுகிறார்.

''ஒருவனே தேவன்—ஆம்; அவனுக்கு உருவமில்லை; பெண்டு பிள்ளை கிடையாது. அவன் அன்பு மயம். அறிவு மயம்'' என்பது மதத்தை ஒழிக்காது, வளர்க்கும். மார்க்சியம் இந்த 'மத எதிர்ப்பு அறிவியக்கத்தை'க் கடுமையாக எதிர்க்கிறது. பழைய 'சுயமரியாதை இயக்கத்திற்கு'க்கூட தி. மு. க.வின் இந்த 'அறிவியக்கம்' எதிரிடை யானது.

## மதம் அபின், அதை ஒழிப்பது எப்படி ?

''மதம் மக்களை மயக்கும் அபின்''—மார்க்ஸ் அருளிய இந்தப் பொன்னுரை மதத்தைப் பற்றிய மார்க்சிய சித்தாந்தத்தின் அஸ்திவாரக் கல். நவீன மதங்கள், கோவில்கள், மத ஸ்தாபனங்கள் முதலிய யாவற்றையும் முதலாளித்துவப் பிற்போக்கின் ஆயுதங்களாகவே மார்க்சியம் மதிப்பிடுகிறது. சுரண்டல், கொள்ளைக்கு வாளும் கேடயமுமாக உதவுவதும், பாட்டாளி வர்க்கத்தை அறியாமையில் ஆழ்த்துவதுமே மதம், மத ஸ்தாபனங்களின் பெரு நோக்கமாகும்.

இவ்வாறு கூறிய ஏங்கெல்ஸ், அதே பொழுதில், கம்யூனிஸ்டுகளைவிட மத எதிர்ப்பில் 'அதி தீவிரவாதிகளாக' அல்லது 'அதிகப் புரட்சிக்காரர்களாக' விரும்பியவர்களை மீண்டும் மீண்டும் கண்டித்திருக்கிறார். கம்யூனிஸ்டுக் கட்சித் திட்டத்தில் பகிரங்க நாத்திகப் பிரச்சாரமு , வெளிப்படையான மத எதிர்ப்பும் இடம் பெற வேண்டு

மென்று அவர்கள் ஆர்ப்பாட்டமாக நடத்திய கிளர்ச்சிகளை யும் ஏங்கெல்ஸ் அழுத்தமாகக் கண்டித்திருக்கிறார்.

இங்கே மார்க்சியத் தலைவர்கள், மத எதிர்ப்புக் கொள்கையையும் மத எதிர்ப்பு நடைமுறையையும் எப்படி எவ்வாறு இணைக்கிறார்கள் என்பது சிந்தனைக்கு விருந்தாகும். கொள்கையைப் பொறுத்தமட்டில் மதம் அபின் தான் என்றும், மத ஸ்தாபனங்கள் சுரண்டல் சூறையாட்டத்தின் கற்கோட்டைகளும் இரும்புக் கதவுகளுமே என்றும் ஐயந்திரிபு அறக் கூறுகிறார்கள். ஆனால் நடைமுறையைப் பொறுத்தமட்டில் கட்சித் திட்டத்தில் பகிரங்க நாத்திகம் வெளிப்படையான மதஎதிர்ப்பு இடம்பெறக் கூடாதென்று கச்சிதமாகக் கூறுகிறார்கள். கட்சித் திட்டத்தில் இடம் பெற வேண்டும் என்கிற ''அதி தீவிரவாதிகளை'' அழுத்தமாகக் கண்டிக்கிறார்கள்.

தி.மு.க. தலைமைப் பீடமோ, கம்யூனிஸ்டுகளின் திட்டத்தில் பகிரங்க மத-எதிர்ப்பு இடம்பெறாததால் அவர்கள் உண்மையான பொது உடைமைவாதிகளல்ல என்கிறார்கள். ''உறுதியாக வெளிப்படையாக மத எதிர்ப்புப் போராட்டம் நடத்தும் நாங்கள்தான் மெய்யாகவே" 'மார்க்சிய சித்தாந்தத்தை'ப் ''பரப்பும் மகாசக்தி'' என்கிறார்கள். பளா பளா! மார்க்ஸைவிடச் சிறந்த மார்க்சிய வாதிகள்!

*14-11-54*

# அராஜகவாதிகளுக்குக் கண்டனம்

டூரிங், பூர்பாக் ஆகியவர்களின் லோகாயதவாதப் போக்கைப் பற்றிய மார்க்ஸ்-ஏங்கெல்ஸ் விமர்சனத்தைச் சென்ற வாரம் கண்டோம். அந்த விமர்சனத்தின் மூலம் மார்க்சியவாதிகளின் மதத்தைப் பற்றிய கொள்கை, திட்டம் நடைமுறை எப்படி இருக்க வேண்டும் என்பதையும் பார்த்தோம்.

ஏங்கெல்ஸ் காட்டும் மற்றும் சில உதாரணங்களையும் கவனிப்போம்.

## பிளாங்குஸ்டுகளின் தவறு

'பாரிஸ் கம்யூன்' எழுச்சி, இரத்தவெள்ளத்தில் புதைக்கப்பட்ட பிறகு, புரட்சித் தலைவரான லூயி பிளாங் என்பவரைப் பின்பற்றியவர்கள் அகதிகளாகி லண்டனில் குடியேறினர். இந்த பிளாங்குஸ்டுகள் 1874ல் வெளியிட்ட திட்ட அறிக்கையில் மதத்தை எதிர்த்து மிக ஆரவாரமாக யுத்தப் பிரகடனம் செய்திருந்தார்கள். ஏங்கெல்ஸ் இந்த தடபுடலான மத எதிர்ப்பை சுத்த மடத்தனம் என்று கண்டித்தார். அந்தக் கண்டனத்தில் இத்தகைய யுத்தப் பிரகடனம் பக்தர்களுக்கு மதத்தின்பால் புதிய அக்கறை தோன்றத் தூண்டுகோலாவதோடு சுடுகாட்டை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிற மதத்தின் அழிவுப் பயணத்தைத் தடுத்து நிறுத்தவும் செய்யும் என்று விளக்கிக் காட்டினார். அதோடு பலப்பல உருவங்களில் தோன்றும் சமுதாயப் பணிகளில் பாட்டாளி மக்களில் பெருவாரியானவர்களை

இழுத்து உணர்வுப் பூர்வமாகவும் புரட்சிகரமாகவும் மேன் மேலும் ஈடுபடுத்தும் வர்க்கப் போராட்டத்தால் மாத்தி ரமே மத நுகத்தடியிலிருந்து அடிமைப்பட்ட மக்களை விடுதலை செய்ய முடியும் என்றும் எடுத்துக் காட்டினார். இதனால் மதத்தின்மீது யுத்த பிரகடனம் செய்வது கம்யூனிஸ்டு கட்சியின் அரசியல் கடமை என்பது வெறும் அராஜகவாதச் சொல்லடுக்கேயன்றி வேறொன்றுமன்று என்று ஏங்கெல்ஸ் பிளாங்குஸ்டுகளைக் குற்றம் சாட்டினார்.

## டூரிங் செய்த குற்றம்

இதுபோலவே, 1877ல் தாம் தீட்டிய ''டூரிங் எதிர்ப்பு" என்ற நூலின் மூலமும் ஏங்கெல்ஸ் வழிகாட்டினார். அந்த நூலில் தத்துவஞானியான டூரிங் மத எதிர்ப்புத் துறையில் செய்த இரண்டுவிதக் குற்றங்களைக் கண்டித்தார்.

குற்றம் ஒன்று: லோகாயதவாதியான டூரிங் மதத் திற்கும், கருத்து முதல்வாதத்திற்கும் (Idealism) லவலேசம் சலுகை காட்டியது. இதை ஏங்கெல்ஸ் ஈவிரக்கமின்றித் தாக்கினார்.

குற்றம் இரண்டு: ''சோஷலிஸ்டு சமுதாயத்தில் மதத்தை பகிஷ்கரிக்க வேண்டும்" என்றார் டூரிங். டூரிங்கின் இந்தப் போலிப் புரட்சி எண்ணத்தையும் முதல் குற்றத் தைக் தாக்கிய அத்தனை வேகத்தோடு ஏங்கெல்ஸ் கண்டித்தார்.

மத எதிர்ப்பு யுத்தப் பிரகடனவாதிகளை விமர்சனச் சாணையில் தீட்டிக் காட்டும்பொழுது, ஏங்கெல்ஸ் மற்றொரு சரித்திர சம்பவத்தையும் அதன் படிப்பினைகளையும் நம் முன் வைக்கிறார். மதத்தை எமலோகம் அனுப்ப பகிரங்கப் போர் தொடுப்பது ''பிஸ்மார்க்கைவிடப் பெரிய பிஸ்மா மார்க் ஆவதாகும்." அதாவது ஜெர்மனியில் கத்தோலிக்க மத—எதிர்ப்பு நடத்திய பிஸ்மார்க்கின் 'களிமண்' புத்தியைக் காப்பியடிப்பதாகும் என்கிறார்.

## பிஸ்மார்க்கின் குருட்டுப் பாய்ச்சல்

பிஸ்மார்க் இராணுவ சர்வாதிகாரியாக ஜெர்மனியை ஆட்டிப் படைத்தவன். ''கலாச்சார போராட்டம்'' என்ற நாமம் சூட்டி, அவன் ஜெர்மன் கத்தோலிக்கர் கட்சிக்கு விரோதமாகப் போலீஸ் நடவடிக்கை எடுத்து அதை நசுக்கித் துடைக்கத் தலைகீழாக நின்றான். பலன் என்ன? பிஸ்மார்க் தொடுத்த மத எதிர்ப்புப் போராட்டத்தின் பலனாக கத்தோலிக்க மதம் அழியவில்லை. மாறாக கத்தோலிக்கரிடம் மத உணர்ச்சியும் போர்க் குணமும் முறுக்கேறி அது வலுவடைந்தது. இது மட்டுமா? இந்த மத எதிர்ப்புப் போராட்டம், அரசியல் பிரிவுகளின் மோதல்களை முன்னணிக்குக் கொண்டுவர வேண்டியதற்குப் பதிலாக மதப் பிரிவுகளின் மோதல்களை முன்னணியில் ஏற்றி வைத்தது. இதன் மூலம், பாட்டாளி வர்க்க ஜனநாயக சக்திகளில் ஒரு பகுதியினர் கவனம் திசை திருப்பி விடப்பட்டது. உடனடியான வர்க்கப் போராட்டப் புரட்சிப் போராட்டப் பணிகளில் அவர்களை ஈடுபடச் செய்வதற்கு மாறாக மிகமிக மேலெழுந்தவாரியான பொய்யான போலித்தனமான பூர்ஷ்வா மத-எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபடச் செய்தது.

## சங்கமும் கல்வியும்

எனவே, வருங்கால-அந்தப் புரட்சிப் புலியான 'டூரிங்' பிஸ்மார்க்கின் மடத்தனத்தை மற்றொரு வடிவத்தில் 'காப்பி' அடிக்க விரும்பினார் என்று ஏங்கெல்ஸ் குற்றஞ் சாட்டினார். அதே பொழுதில் கம்யூனிஸ்டுகளுக்கு (அன்று ஜெர்மனியில் சோஷல்-டிமாக்கிரட்டுகள் என்று அழைக்கப் பட்டனர்) பின்வருமாறு புத்தி புகட்டினார்.

''பாட்டாளி வர்க்கத்தை ஸ்தாபன ரீதியாக உருவாக்க வேண்டும். அவ்வாறு உருவாக்கும் பொழுதே அதற்கு அறிவுச் சுடர் கொளுத்த வேண்டும். ஸ்தாபனத்தைக் கட்டல், கல்வி புகட்டல் ஆகிய திருப்பணிகளில் கம்யூ

ணிஸ்டுக் கட்சி மிகுந்த சகிப்புத் தன்மையோடு முழு மூச்சாக ஈடுபட வேண்டும். இது ஒன்றுதான் மதத்தை சுடுகாடு சேர்க்கும் வெற்றிப் பாதை. மாறாக, கம்யூனிஸ்டுகள் மதத்தின்மீது அரசியல் போர் தொடுக்கும் அவசரக் குடுக்கை வாதத்தில் ஒருக்காலும் குதிக்கக் கூடாது."

ஏங்கெல்ஸின் இந்தக் கருத்தோட்டத்தை, ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சி முற்ற முற்ற ஜீரணம் செய்து பிசகற்ற முறையில் கடைப்பிடித்தது. உதாரணமாக, ''ஜெர்மன் கம்யூனிஸ்டுகள் ஜெஸ்யூட்கள் என்ற ரோமன் கத்தோலிக்க பாதிரிமார்களுக்கு சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும். அவர்கள் ஜெர்மனியில் நுழைய அனுமதிக்கப்பட வேண்டும். குறிப்பிட்ட எந்த மதத்திற்கெதிராகவும் போலீஸ் நடவடிக்கை எடுப்பது தடுக்கப்பட வேண்டும்'' என்று போராடினர்.

## சர்க்காருக்கு மதம் தனிப்பட்ட விவகாரம்

மத எதிர்ப்பில் வேறு ஒரு கருத்தோட்டத்தையும் ஏங்கெல்ஸ் எடுத்துக் காட்டி குணதோஷம் கூறுவதைப் பாருங்கள்.

1891ல் ஜெர்மனியில் உள்ள எர்பர்ட் என்ற இடத்தில் இரண்டாவது அகிலம் கூடி ஒரு திட்டம் வகுத்தது. இந்த எர்பர்ட் திட்டத்தில் மதம் தனிப்பட்ட விவகாரம் என்ற பேர்போன கொள்கை இடம்பெற்றது. இந்த அம்சத்தை திட்டத்தில் இணைத்ததின் மூலம் ஜெர்மனியில் கம்யூனிஸ்டுகள் ஏங்கெல்ஸ் அறிவுறுத்திய அரசியல் நடைமுறைத் தந்திரங்களை உறுதிப்படுத்தினர்.

ஆனால் எர்பர்ட் திட்டத்தில் கண்ட இந்தக் கொள்கையை, சிலர் தங்களுடைய சந்தர்ப்பவாதத்திற்கு ஏற்றவாறு புரட்டினர். கம்யூனிஸ்டுகள், கம்யூனிஸ்ட் கட்சியைப் பொறுத்த மட்டில் மதம் தனிப்பட்ட விவகாரம் என்றே இதற்கு அர்த்தம் என்றும், எனவே நம்மைப் பொறுத்த

மட்டிலும் சரி, நமது கட்சியைப் பொறுத்தமட்டிலும் சரி, மதம் தனிப்பட்ட விவகாரமாகவே இருக்க வேண்டும். எனினும் இவர்கள் கோணற்கழி வெட்டி அகராதி படித்தனர்.

## கம்யூனிஸ்டுகளுக்கு அல்ல

இந்த சந்தர்ப்பவாதக் கருத்தோட்டத்திற்கு எதிரிடையாக ஏங்கெல்ஸ் ஒரு நீண்ட நேரடி விவாதத்தில் இறங்கவில்லை. இதற்கு அவர் நேர்முகமாக 'பளிச்'சென்று பதில் சொல்லி ஒரு அறிக்கையை வெளியிட்டார். அதில் ஏங்கெல்ஸ் ஆணித்தரமாக வலியுறுத்திக் கூறியது இதுதான். ''அரசாங்கத்தைப் பொறுத்தமட்டில்தான் மதம் தனிப்பட்ட விவகாரம் என்று கம்யூனிஸ்டுகள் கருதுகிறார்கள். ஆனால் அவர்களைப் பொறுத்த மட்டிலோ, மார்க்சியத்தைப் பொறுத்த மட்டிலோ கம்யூனிஸ்டுக் கட்சியைப் பொறுத்த மட்டிலோ மதம் தனிப்பட்ட விவகாரம் அல்ல.''

## சரித்திரத்தின் போதனை

மேற்படி சரித்திர நிகழ்ச்சிகளிலிருந்து வடித்தெடுத்த மார்க்சிய போதனைகள் பின்வருவன:

1. மத எதிர்ப்புப் போர் முழக்கம் அணைந்து வரும் அகல் விளக்குக்கு நெய்யும் திரியும் இடும் செய்கை.

2. மேன்மேலும் சமூகப் பொருளாதாரப் பிரச்சினைகளில் பாட்டாளிப் பொது மக்களை ஈடுபடுத்தும் வர்க்கப் போராட்டத்தால் மட்டுமே மதப் பிடிப்பிலிருந்து மக்களை விடுதலை செய்ய முடியும்.

3. மத எதிர்ப்புப் போர் முழக்கம் கம்யூனிஸ்டுக் கட்சியின் அரசியல் கடமை என்பது வெறும் அராஜகவாதச் சொல்லடுக்கே.

4. லோகாயதவாதியாக மட்டும் இருந்தால் போதாது. மதத்திற்கும் மாயாவாதத்திற்கும் துளிகூட இடங் கொடாத லோகாயதவாதியாக இருக்க வேண்டும்.

5. சோஷலிஸ்டு சமுதாயத்தில் மதத்தைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்பது போலிப் புரட்சி மனப்போக்கு.

6. மத-எதிர்ப்புப் போர் முழக்கம் அரசியல் பிரிவுகளின் மோதல்களை முன் வரிசையில் வைப்பதற்குப் பதில் மதப் பிரிவுகளின் மோதல்களை முன் வரிசையில் வைக்கிறது. ஜனநாயக சக்திகளில் ஒரு பகுதியை வர்க்கப் போராட்டத்தில் ஈடுபடுத்துவதற்குப் பதில் மேலோட்டமான போலித்தனமான பூர்ஷுவா மத எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபட வைக்கிறது.

7. பாட்டாளிப் பொதுமக்களின் வர்க்க ஸ்தாபனங்களை உருவாக்குவதும் அதே பொழுதில் அறிவுச் சுடர் கொளுத்துவதும்தான் மத-ஒழிப்புக்கு ஒரு தனி வெற்றிப் பாதை, மதத்தின் மீது போர் முழக்கம் செய்வது அவசரக் குடுக்கை வாதம் (Adventurism).

8. அரசாங்கத்தைப் பொறுத்தமட்டில் மதம் தனிப்பட்ட விவகாரம். மார்க்சியத்தையோ, கம்யூனிஸ்டுக் கட்சியையோ பொறுத்த மட்டில் மதம் தனிப்பட்ட விவகாரம் அல்ல.

## தி. மு. க.களின் வாதங்கள்

ஆனால் தி.மு.க. ''பகுத்தறிவுவாதிகளோ'' மதம்தான் 'அடிப்படைச் சாபக்கேடு', 'அடிமைத் தனத்தின் தாய்' என்றும் அந்தத்தாய்பெற்றெடுத்த பெண்கள்தான் ''பொருளாதார அடிமைத்தனம், அரசியல் அடிமைத்தனம், சமுதாய இழிவு ஆகியவை என்றும் அறுதியிட்டு உறுதி கூறுகிறார்கள். இந்தத் தாய்—மகள் பிரச்சினையில் தெளிவு ஏற்பட்டாலன்றி ''கம்யூனிஸ்டுகளின் போக்கில் உள்ள

தடுமாற்றம் நீங்காது'' என்று தாங்கள் தேர்ந்து தெளிந்த முடிவை அனுதாபத்தோடு தெரிவிக்கிறார்கள்.

''விதையிலிருந்து செடி வந்ததா, செடியிலிருந்து விதை வந்ததா?'' என்று கேட்டால் என்ன பதில் சொல்லுவோம். விதையிலிருந்து செடி, செடியிலிருந்து மீண்டும் விதைகள் என்றுதானே பதில் சொல்லுவோம். அது போலத்தான் மதஎண்ணத்தின் அடிப்படையில் பொருளாதார அரசியல் அடிமைத்தனங்கள் உருவாகி அவைமூலம் மேலும் மத அடிமைத்தனம் என்ற விதையைப் பெருக்கு கிறது. ''மத அடிமைத்தனம் என்ற குட்டை நீர், அரசியல் பொருளாதார அடிமைத்தன மழையாக வெப்பத்தாலும் மத அடிமைத்தனக் குட்டை நீராகவே தேங்குகிறது'' என்று இந்த அறிவியக்க அறிஞர்கள் ''மார்க்சியத்தை'' கிளிச்சானுக்கு மறிச்சானகப் புரட்டி வார்த்தைக்கு வார்த்தை சிங்காரம் பேசுகிறார்கள்.

''நிலத்தைப் பண்படுத்திய பிறகே விதை தூவ வேண்டும். மனத்தை, மத மாசுகள் எனும் வெடிப்புகள் கொண்ட நிலமாக வைத்துவிட்டு அதில் பொருளாதாரச் சீர்திருத்தம் எனும் விதையைத் தூவினல் என்ன நடக்கும்? விதை சத்தற்றதாகி மக்கிவிடும். அல்லது தப்பித் தவறி முளைத்தாலும் முளையிலேயே கருகிவிடும். வீட்டில் ஒட்டடை தட்டித் தூசி துடைத்து வெள்ளையடிக்கா விட்டால் வெள்ளை கருப்பாகிவிடும். அதுபோல், மதம் ஒழிக்கப்படாமல், வர்க்கப் போராட்டம் நடத்தினல் ஊதியத்தைச் சூடம் சாம்பிராணிக்கே தொழிலாளி செல விடுவான் என்று இடம், பொருள் ஏவலைத் தாண்டி உவமான உவமேயங்களைச் சரமாரியாகப் பொழிந்து மார்க்சிய விரோத ''அராஜக வாதச் சொல்வீச்சுக்கு'' இலக்கியம் படைக்கிறார்கள், தி.மு.க. எழுத்துக் கலைஞர்கள்.

## அசல்களின் மார்க்சியம்

''வர்க்கப் போராட்டத்தால் மாத்திரமே மதப்பிடிப்பி லிருந்து மக்களை விடுதலை செய்ய முடியும்'', என்ற மார்க்சிய

சித்தாந்தத்தை 'கொய்ஞு மாத்திரை' போல் கருதும் தி. மு. க. தலைமை, மதக் கருத்துக்களின் 'மோதல்களை' முன் வரிசையில்வைத்து, ''மேலோட்டமான, போலித்தனமான பூர்ஷுவா மத-எதிர்ப்புப் போராட்டம்" நடத்துகிறார்கள். இந்துக்களின் ''கல்லு முதலாளிகள்" தான் முதற்பெரும் எதிரி என்னும், இந்த 'ஒருவனே தேவன்' வாதிகள் பாட்டாளிகளின் வர்க்க ஸ்தாபனத்தை உருவாக்க மறந்தும் நினையாதவர்கள். இவர்கள்தான் மத எதிர்ப்பைப் பொறுத்தமட்டில் ''எதார்த்த மார்க்சிய சித்தாந்தத்தை"க் கடைப்பிடிக்கும் ''உண்மையான பொதுவுடைமைவாதி" களாம்!

மத எதிர்ப்பு பற்றிய சரித்திர சம்பவங்களில் மார்க்ஸ், ஏங்கெல்ஸ் ஆகிய மார்க்சிய மூலவர்களின் பிரதிபலிப்புகளை—அறிக்கைகளை லெனின் தொகுத்துக் காட்டியதைத் தான் இதுவரை கூறினோம்.

## நம்மைப்பற்றி தி. மு. க.

''மார்க்சியத்தைக் கடைப்பிடிப்பதில் ஏனோ தானோ என்ற கவலையற்ற மனப்பான்மையுடையவர்களுக்கும் சரி, மார்க்சிய வழியில் சிந்திக்க முடியாத அல்லது சிந்திக்க விரும்பாதவர்களுக்கும் சரி, மேலே எடுத்துக் காட்டிய சரித்திரம் மார்க்சியத்தின் அர்த்தமற்ற முரண்பாடுகளையும் பொருளற்ற ஊசலாட்டங்களையும் தொகுத்த தொகுப்பு என்றே படும். ''முன் பின் முரணற்ற'' நாஸ்திகம், மதத்திற்கு விட்டுக் கொடுக்கும் 'சலுகைகள்', கடவுளுக்கு எதிரான பு-ர்-ர்-ர்-ரட்சிப் போராட்டத்திற்கும் மத உணர்ச்சி கொண்ட தொழிலாளிகளைத் திருப்திப் படுத்தும்" கோழைத்தனமான விருப்பம், அவர்கள் பீதியடையக் கூடாதென்ற பயம் இத்யாதி இத்யாதிகளுக்கும் இடையில் நிகழும் ஊசலாட்டங்கள் ஆகியவற்றால் ஆக்கிய அவியல் என்றே மார்க்சிய முதல்வர்களின் மத எதிர்ப்புச் சரித்திரத்தை அந்தச் 'சிந்தனைச் சிற்பிகள்' கருதுவர். அராஜகவாதச் சொல்லடுக்கு வீரர்களின் (Anarchist phrase montgers) இலக்கியத்தில் மார்க்சியத்தின்

மீது ஏவப்படும் இத்தகைய தாக்குதல்கள் ஏராளமாகக் காணக்கிடக்கின்றன.

## லெனின் போதிப்பதென்ன?

''மார்க்சியத்தைப் பொறுப்புணர்ச்சியோடு கடைப்பிடிக்க முடிகிற யாருக்கும், மார்க்சிய தத்துவஞானக் கொள்கைகளின் மீதும் கம்யூனிஸ்டு இயக்கத்தின் சர்வதேச அனுபவத்தின் மீதும் ஆழ்ந்து சிந்தை செலுத்துகிற எவருக்கும் மதத்தைப் பற்றிய மார்க்சியத்தின் நடைமுறைத் தந்திரம் (Marxist-Tactics) முழுக்க முழுக்க முன் பின் முரணற்ற தன்மையது என்று பளிச்சென்று வெளிச்சமாகும். மார்க்ஸ், ஏங்கெல்ஸ் ஆகியவர்கள் ஆழ்ந்த சிந்தனையின் விளைவுதான் மேற்படி தந்திரங்கள் என்பதும் தெளிவாகப் புலனாகும். மேலும் ஆழ்ந்த உணர்ச்சியற்ற போலித் தத்துவ வாதிகள் (Dilietantists) ஊசலாட்டம் என்று கருதும் மார்க்சிய நடைமுறைத் தந்திரம் இயக்குவியல் லோகாயத வாதத்தின் நேரடியான தவிர்க்க முடியாத விளைவாகும் என்பது நன்கு விளங்கும். மத உணர்ச்சி கொண்ட தொழிலாளிகளைப் ''பயமுறுத்தக்கூடாது'' என்ற விருப்பம்தான், மதத்தைப் பொறுத்த மட்டில் மார்க்சியத்தின் தோற்ற மாத்திரையான 'மிதவாதப் போக்குக்கு'க் காரணம் என்று சமாதானம் கூற நினைப்பது பெருந் தவறாகும். மாறாக இந்தப் பிரச்சினையைப் பொறுத்த மட்டில் மார்க்சியத்தின் அரசியல் நடைமுறை அதன் தத்துவ ஞானக் கொள்கைகளோடு பிரிக்க முடியாதபடி இணைக்கப்பட்டிருக்கிறது.''

—இவ்வாறு மதத்தைப் பொறுத்த மட்டில் மார்க்சிய வழியை எதிர்ப்பவர்களும் ஏற்பவர்களும் எவ்வாறு கருதுவார்கள் என்பதை நேர் நிகரற்ற மார்க்சிய வாதியான லெனின் ஒப்பற்றவிதத்தில் விளக்கிக் காட்டுகிறார். லெனினுடைய இந்த நிர்ணயிப்புகளை ஒரு முறைக்குப் பன்முறை தமிழ் மக்கள் படித்துச் சிந்தித்துப் பார்க்க வேண்டுகிறோம்.

*21—11—54*

# மூவகைக் கருத்துக்கள்

இந்தக் கட்டுரையில் ஆதியோடந்தம் லெனின் மதத்தைப் பற்றிய கருத்துக்களையே எடுத்துக் காட்டுகிறோம். காரணங்கள் மூன்று.

1. இன்றைய உலகக் கம்யூனிஸ்ட்டு இயக்கத்தின் ஒப்பற்ற தலைவர் லெனின். லெனினுடைய கருத்துக்களை விரிவாகக் கொடுப்பதன் மூலம், கம்யூனிஸ்டுகளின் (அவர்கள் எந்த நாட்டவராயினும் சரி) மதத்தைப் பற்றிய அதிகார பூர்வமான அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள முடியும்.

2. தமிழகக் கம்யூனிஸ்டுகள் எந்த அளவு லெனின் வழியில் — இத் துறையில் — சென்றிருக்கிறார்கள் — செல்கிறார்கள் என்பதை நிர்ணயிக்க உதவும்.

3. திராவிட முன்னேற்றக் கழகத் தலைமையினர் தங்கள் கருத்துக்களை மார்க்சியக் கருத்துக்களாக ஜோடித்து ஜிகினா வேலை செய்து காட்டும் பன்முயற்சியின் புரட்டும் மார்க்சிய இலக்கிய ஞான சூன்யமும் அம்பலத்திற்கு வரும்.

4. இத்தொடர் கட்டுரையில் இவ்வாரமும் அடுத்த வாரமும் மார்க்சிய மூலவர்களின் மதம் பற்றிய கொள்கையைக் குறிப்பிட்ட அளவு அலசிப் பார்ப்போம். அப்பால் இந்தக் கொள்கை, சோவியத் யூனியனிலும், கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும், குடியரசு சீனத்திலும் எவ்வாறு நடைமுறையில் வந்திருக்கிறது? அந்த நடைமுறையின் புதிய அனுபவங்களும், படிப்பினைகளும் என்ன என்பதை ஆராய்வோம். அதற்கும் அப்பால் கடந்த 20 ஆண்டுகளில் தமிழ்நாட்டுக் கம்யூனிஸ்டுகள் இத்துறையில் என்ன

திராவிட இயக்கத்தார் என்ன சொன்னார்கள்—என்ன செய்தார்கள் என்பதைப் பரிசீலனை செய்வோம். இத்தகைய ஆராய்ச்சிக்கு லெனினுடைய கருத்துக்கள் அடிப்படை அளவுகோலாக விளங்கும்.

இனி லெனினுடைய கருத்துக்களைக் கவனிப்போம். அதற்கு முன் வாசகர்களுக்கு ஒரு விஷயம்! பொருள்முதல் வாதம், லோகாயதவாதம். பௌதிகவாதம்,பிரகிருதிவாதம் ஆகிய சொற்கள் ஆங்கிலத்தில் (Materialism) என்ற சொல்லின் பொருளைக் குறிக்கும். இயங்கு இயல், இயக்குவியல், தர்க்கவியல் என்ற சொற்கள் ஆங்கிலத்தில் (Dialectics) என்ற சொல்லின் பொருளையே குறிக்கும்.

### மார்க்சியம்—உயர்ந்தரகப் பொருள்முதல்வாதம்

லெனின் சொல்கிறார் கேளுங்கள்!

"மார்க்சியம் பொருள்முதல் வாதமே 18-வது நூற்றாண்டில் பிரெஞ்சு நாட்டில் அறிவுக் களஞ்சியம் கண்ட பகுத்தறிவு வாதிகளின் (Encyclopaedists) பொருள் முதல் வாதமும் 19வது நூற்றாண்டின் முற்பகுதியில் ஜெர்மனியில் பூர்பாக்கின் பொருள் மூதல் வாதமும் எந்த அளவு மதத்திற்கு இணங்காத—வணங்காத எதிரிகளாக விளங்கினவோ அந்த அளவு உறுதியான உக்கிரமான எதிரிதான் மார்க்சியமும், இது சந்தேகத்திற்கு அப்பாற்பட்டது.

"நாம் மதத்தை எதிர்த்துத் தீர வேண்டும். இது பொருள் முதல் வாதத்தின் அரிச்சுவடி. எனவே மார்க்சியத்தின் அ ஆவன்னவும் இதுதான். ஆனால் மார்க்சியம் அரிச்சுவடியில் நின்று விடுகிற பொருள் முதல் வாதமல்ல. மார்க்சியம் இந்த அரிச்சுவடிக்கு அப்பாலும் செல்கிறது. அது கூறுகிறது: மதத்தை எப்படி எதிர்க்க வேண்டும் என்பதை நாம் தெளிவாகப் புரிந்து தீர வேண்டும். அதன் பொருட்டு பொதுமக்கள் மீது ஆதிக்கம் செலுத்துகிற மதம், மத நம்பிக்கை ஆகியவற்றின் மூல ஊற்றைப் பற்றி பொருள் முதல் வாதக் கண்ணோட்டத்தோடு, நாம் தெளிவான விளக்கம் பெற வேண்டும்."

## லெனின் வழி

''மத எதிர்ப்புப் போராட்டம் வெறும் தத்துவார்த்தப் பிரச்சாரம் என்ற எல்லைக்குள் அடங்கிவிடக்கூடாது. அல்லது அந்த அளவுக்குச் சுருங்கிவிடக் கூடாது. மத எதிர்ப்புப் போராட்டம் வர்க்கப் போராட்டத்தின் உருப்படியான வேலைகளோடு இணைக்கப்பட வேண்டும், மத எதிர்ப்புப் போராட்டத்தின் லட்சியம், மதத்தின் சமூக வேர்களை, ஆணிவேர், பக்கவேர், சல்லி வேரோடு அகழ்ந்தெறிவதாக இருக்க வேண்டும்.

இவ்வாறு லெனின் மத-எதிர்ப்புப் போராட்டத்தின் எல்லை வட்டத்தைத் தெக்கத் தெளிவாக நிர்ணயித்துத் தருகிறார். இதிலிருந்து மதத்தை எப்படி எதிர்க்க வேண்டும் என்பதிலேயே மார்க்சியம் மூக்கிய கவனம் செலுத்துகிறது என்பது குருடனுக்குக்கூட வெளிச்சமாகும். இதிலிருந்து மத-எதிர்ப்பு, வர்க்கப் போராட்டத்திற்கு உள்ளடங்கி நடைபெற வேண்டும் என்பதும் மத எதிர்ப்பின் லட்சியம் மதத்தின் சமூக வேர்களை அகழ்ந்தெறிவதாயிருக்க வேண்டும் என்பதும்தான் லெனின் வழி என்று பளிங்கென விளங்கும்.

## தி.மு.க. தலைவர்களின் கருத்தோட்டங்கள்

தி.மு.க. தலைவர்களிடையில் மூன்று விதக் கருத்தோட்டங்கள் தென்படுகின்றன.

1. ''அறிவுப் புரட்சி"க்குத் (மத எதிர்ப்பு)தான் 'மார்க்சிய சித்தாந்தம்' முதல் வரிசை அளிக்கிறது என்பது.

2. மார்க்ஸ் கண்ணோட்டமோ, லெனின் கண்ணோட்டமோ அதைப்பற்றிக் கவலையில்லை. மத எதிர்ப்புதான் முதல் வேலை என்பது.

3. மார்க்ஸ்-ஏங்கெல்சுக்கு முன்னால் வால்டேர், ரூஸோ ஆற்றிய பணி, லெனின், ஸ்டாலினுக்கு முன்னால் டாஸ்டோயெவ்ஸ்கி, டால்ஸ்டாய் ஆற்றிய பணி, மாசேதுங்குக்கு முன்னால் சன்யாட்சன் ஆற்றிய பணி—அதுதான். 'மத எதிாப்பு—அறிவு இயக்கப் பணி—அதுதான் எங்கள் முதற் பெரும் பணி என்பது. இன்னும் சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி இந்த மூன்று கருத்தோட்டங்களையும் முடிச்சுப்

போட்டுக் காட்டும் பெருந்தகைமையும் மேற்படித் தலைவர்களிடமுண்டு. இங்கு மார்க்சியத்திற்கு உரிமை கொண்டாடும் முதல் கருத்தோட்டத்தை, லெனின் காட்டும் வெளிச்சத்தில் பாருங்கள். இந்த 'அறிஞர்கள்' எத்துணை துணிந்த மார்க்சியப் புரட்டர்கள் என்பது புலனாகும்.

## அவர்கள் என்ன சொல்கிறார்கள்

மதம் தனது பிடிப்பைப் பொதுமக்களிடம் எதற்காக நிலைநிறுத்திக் கொள்கிறது? நகரத்துப் பாட்டாளி மக்களில் பின்தங்கிக் கிடப்பவர்களிடமும், நாட்டுப்புறத்தில் அரை குறைப் பாட்டாளிகளிடமும், விவசாய மக்களிடமும் மதம் தனது சொந்த சக்தியை ஏன் காப்பாற்றிக் கொள்கிறது? இந்த வினாவுக்கு முதலாளித்துவ முற்போக்காளர்களும் தீவிரப் பொருள் முதல்வாதிகளும் 'மக்கள் அறியாமை' தான் காரணம் என்று உடனடியாக விடையிறுக்கிறார்கள். அவர்கள் அதோடு நிற்பதில்லை ''ஆத்திகம் (மதம்) ஒழிக!'' ''நாத்திகம் வாழ்க!'' என்று விண்வெடிக்கக் கோஷிக்கிறார்கள். நாத்திகத்தை (மத எதிர்ப்பை)ச் சந்து பொந்துகளெல்லாம் பிரச்சாரம் செய்வதுதான் எங்கள் முதற்பெரும் தனிப்பெருங் கடமை'' என்று முழங்குகிறார்கள்.

## மார்க்சிய வாதியின் பதில்

மார்க்சியவாதி என்ன பதில் அளிப்பான் தெரியுமா? ''ஊஹூம்! அல்ல. மதம் நிலைத்து நிற்பதற்கு மக்களின் அறியாமையே காரணம் என்று இவர்கள் சொல்வது உண்மையல்ல. இத்தகைய கருத்து மேற்போக்கான கருத்து. குறுகிய எண்ணங்கொண்ட கருத்து. முதலாளித்துவக் கலைப் பண்பு படைத்த கருத்து, இவர்களுடைய இந்தக் கருத்து மதத்தின் வேரையும், தூரையும் பொருள் முதல்வாதக் கண்ணோட்டத்தோடு விளக்கவில்லை. கருத்து முதல்வாதக் கண்ணோட்டத்தோடுதான் விளக்குகிறது என்று பதில் இறுப்பான்.

மார்க்சியவாதிகளின் கண்ணோட்டம் பொருள் முதல் வாதக் (Materialistic) கண்ணோட்டம், தி.மு.க. தலைமையின்

கண்ணோட்டம், கருத்து முதல்வாதக் கண்ணோட்டம் (Idealistic),

## மதங்களின் மூலவேர்

நவீன முதலாளித்துவ நாடுகளில் மதத்தின் ஆதார பீடம், பிரதானமாக சமுதாய ரீதியானது என்கிறார் லெனின். இதன் பொருள் என்ன? இன்றைய மதங்களின் ஆக—ஆழமான ஆணிவேர் உழைத்து உடல் தேயும் பெருவாரியான பொதுமக்களின் சமுதாய அடிமைத்தனத்தில் வேரடித்து நிற்கிறது. நிலப்பிரபுத்துவமும் முதலாளித்துவமும், பாட்டாளிப் புழுக்களை அல்லும் பகலும் அறுபது நாழிகையும் நெருப்புச் சட்டியில் போட்டு வறுத்துக் கொண்டே இருக்கின்றன. நிலப்பிரபுக்களும் ஏகாதிபத்திய வெறியர்களும் பண இராட்சதர்களும் அபூர்வமாக நிகழும் யுத்தம், பூகம்பம் ஆகிய படுபயங்கர நிகழ்ச்சிகளைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு நீச நாசத் தொல்லைகளையும் நெஞ்சு பிளக்கும் சித்திரவதைகளையும் பாட்டாளி உலகுக்கு இழைக்கிறார்கள். இத்தகைய நிலப்பிரபுத்துவக் குருட்டாவேசக் கும்மாளத்தின் முன்னால் முதலாளித்துவக் கண்மூடி தர்பாரின் எதிரில், கோடானு கோடிப் பாட்டாளி மக்கள் அனுதாபமும் ஆதரவுமின்றி நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கிடக்கிறார்களல்லவா? இத்தகைய கொடிய நிராதரவில் இன்றைய மதங்களின்—அடி வேர் நடு வேர் வேரூன்றி நிற்கிறது.

"கடவுள்களைப் படைத்தது பயம்." நிலப்பிரபுத்துவம், முதலாளித்துவம் ஆகியவற்றின் நடவடிக்கைகளை முன்கூட்டியே புரிந்து தெரிந்து கொள்ளும் அறிவுக் கண் பொதுமக்களுக்கு இல்லை. ஆகவே, நிலப்பிரபுத்துவ முதலாளித்துவ சக்திகளைக் குருட்டு, இருட்டு சக்திகள் என்கிறோம். இந்தச் சக்திகள் வாழ்வின் ஒவ்வொரு படியிலும் தொழிலாளிகளை, விவசாயிகளை சிற்றுடைமையாளர்களான நடுத்தரத்தார்களை "திடீரென" "எதிர்பாராத விதத்தில்" "அதாவெட்டில்", நிகழும் அழிவுகளாலும், இழிவுகளாலும் கதி கலங்கச் செய்கின்றன. இந்த நாசங்

களும் சேதங்களும் அவை பயணஞ் செய்கிற வண்டியிலேயே தங்களோடு பிச்சைக்காரத்தனத்தையும், பஞ்சைப் பஞ்ஞதித்தனத்தையும், விபசாரித்தனத்தையும், பட்டினிச் சாவுத்தனத்தையும் பந்துமித்திரகளத்ராதிகளோடு அழைத்து வருகின்றன. இந்த அழிவும், இழிவும்தான் இன்றைய மதங்களின் மூலவேர்.

''இந்த உண்மையை முதன்முதலாக எல்லாவற்றிற்கும் மேலாக, ஒவ்வொரு பொருள் முதல் வாதியும் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். பொருள் முதல்வாதத்தின் ஆரம்ப அரிச்சுவடிப்படிப்போடு அவன் நின்று விடாதிருக்க விரும்பினுல் இந்த உண்மையை மனதில் ஆழப் பதிய வைத்துக் கொள்ள வேண்டும்" என்கிறுர் லெனின்.

மத உணர்ச்சியின் பௌதீக அடிப்படையை லெனின் மார்க்சிய லெனினியத்தின் குருநாதன் இவ்வாறு தெளிவு படுத்துகிறுர். லெனின் வழிக்கும் தி.மு.க. தலைமையின் கண்ணோட்டம்—கருத்தோட்டங்களுக்கும் ஆகாயத்திற்கும் பாதாளத்திற்குமுள்ள ஒட்டு. உண்மை இதுதான். ஆனுல் அவர்கள் லெனின்-ஸ்டாலின் சிந்து பாடுகிறுர்கள்! லெனின் சித்தாந்தத்திற்கு வாரிசுரிமை கொண்டாடுகிறுர்கள்! ஆஹா!

**''பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற**
**செய்யாமை செய்யாமை நன்று''**

என்ற குறள் அறம் படிக்கிறுர்கள் போலும்!

## அறிவு மயக்கம்-லெனின் மதிப்பீடு

நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவ அரவையந்திரத்தால் அரைத்துப் பொடி சூரணமாக்கப் படும் பாட்டாளி மக்களின்—நிலப்பிரபுத்துவ முதலாளித்துவ அழிவு சக்திகளுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கிற மனித கோடிகளின் உள்ளத்தில் ஊன்றியிருக்கும் மத உணர்ச்சியை எத்தகைய அறிவு இயக்க இலக்கியங்களாலும் நிர்மூலம் செய்துவிட முடியாது என்கிறுர் லெனின். இதைத் தொடர்ந்து லெனின் மற்றென்றும் கூறுகிறுர். அதாவது அதே பொதுமக்கள், ஒன்றுபட்ட

கட்டுப்பாடான, திட்டமிட்ட, உணர்வு பூர்வமான வகையில் மதத்தின் மூல காரணத்தை எதிர்த்துப் போராட எப்பொழுது கற்றுக் கொள்கிறார்களோ—அதாவது, நிலப் பிரபுத்துவ—முதலாளித்துவ ஆட்சியை அதனுடைய ஒவ்வொரு உருவத்திலும் எதிர்த்துப் போராட எப்பொழுது கற்றுக் கொள்கிறார்களோ அப்பொழுதுதான் மதத்தை அந்தப் பொதுமக்களிடமிருந்து சல்லிவேரோடு கெல்லி யெறிய முடியும் என்றும் அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறார்.

''மேற்சொன்ன கருத்துக்கு, மத எதிர்ப்பைப் போதிக்கும் நூல்கள், கேடு சூழ்பவை என்றோ அல்லது அவசியத்திற்கு அதிகமானவை என்றோ அர்த்தமா? இல்லை. அவ்வாறு ஒருக்காலும் அர்த்தமில்லை. கம்யூனிஸ்டுகள் நடத்தும் மத எதிர்ப்புப் பிரச்சாரம், பாட்டாளி மக்களின் அடிப்படையான பெரும் பணிக்கு—அதாவது சுரண்டல் கொள்ளைக் காரர்களுக்கு எதிரிடையாக, சுரண்டப்பட்ட மக்கள் நடத்தும் வர்க்கப் போராட்டத்திற்கு—உள்ளடங்கினதாகவே இருந்து தீரவேண்டும் என்றுதான் அர்த்தம். இவ்வாறு லெனின் வினா-விடை உருவத்தில் மத எதிர்ப்புப் போராட்டத்திற்கும் வர்க்கப் போராட்டத்திற்குமுள்ள உறவு முறையை நமக்கு விளக்கி வைக்கிறார்.

இது மட்டுமா?

''இயங்கு இயல் பொருள் முதல்வாதத்தை, அதாவது மார்க்ஸ், எங்கெல்ஸ் ஆகிய மேதைகளின் தத்துவ ஞானத்தை வேர் முதல் பழம் வரையில் கற்றறியாதவர்களுக்கு மேற்கூறிய உண்மையைப் புரிந்து கொள்ள முடியாது,'' என்றும் தத்துவஞானப் போராட்ட அறிவின் நிறைகுடமான லெனின் இடித்துச் சொல்கிறார். சொல்லி, இயங்கு இயல் பொருள் முதல்வாதத்தைப் பற்றிய தெள்ளறிவில்லாதவர்களுக்கு மதத்தைப் பற்றிய மார்க்சியத்தின் கொள்கை- செய்கை இணைப்பு ''புரியாது'' என்று வெட்டொன்று துண்டிரண்டாக மார்க்சிய விரோத மத எதிர்ப்பு

வீரர்களின் மறுப்புக்குச் செம்மையாகப் பதில் கொடுக்கிருர்.

## நாமும் அவர்களும்

வர்க்கப் போரட்டத்திற்கு உள்ளடங்கியதாகவே மத-எதிர்ப்புப் போராட்டம் நடைபெற வேண்டுமென்கிருர் லெனின். மத எதிர்ப்புப் போராட்டம்தான் முதல் போராட்டம் என்கிருர்கள் தி.மு.கழக அறிவியக்க வாதிகள்.

இயங்கு இயல் பொருள்முதல் வாதத்தைப் பற்றி நன்கு அறியாதவர்கள்தான், அறிந்துகொள்ளச் சக்தியற்றவர்கள் தான் ''கம்யூனிஸ்டுகளின் கொள்கையும் செய்கையும் முன்னுக்குப் பின் முரணுக இருக்கிறது. கம்யூனிஸ்டுகள் பயந்துபோய் மதத்திற்கு விட்டுக் கொடுக்கிருர்கள். மதத்திற்கு ஆதரவு அளிக்கிருர்கள்" என்றெல்லாம் பிதற்றுவார்கள் என்று லெனின் சொல்கிருர். தி.மு.க. தலைவர்களோ,மத எதிர்ப்பில் மார்க்சிய வாதத்தின் கொள்கை நடைமுறை இணைப்புப் பற்றிய நுணுக்கங்களைப் புரிந்து கொள்ள முயலாது, புரிந்து கொள்ள முடியாது ''கம்யூனிஸ்டுகளின் தலையில் குழப்பம் புகுந்து கூத்தாடுகிறது" என்கிருர்கள்.

இத்தகைய தி மு க. தலைமை மத எதிர்ப்பைப் பொறுத்த மட்டில் மார்க்சியக் கோட்பாடுகளைத் தமிழகத்தில் கடைப்பிடிக்கும் ''மகத்தான சக்தி" தாங்கள்தான் என்று டமாரம் அடிப்பதன் பொருள் என்ன? போகப்போகத் தெரியும்.

28-11-54

# மார்க்சிய வேஷம்

மத எதிரிகளில் மார்க்சிய எதிரிகளுக்கு இயங்கு—இயல் பொருள் முதல்வாதம் பற்றிய தெள்ளறிவு இல்லை. எனவே அவர்களுக்கு மார்க்சியவாதிகளின் கொள்கையும் செய்கையும், எப்படி ஜீவனுள்ள உறவோடு இணைந்து நிற்கின்றன என்பதைப் புரிந்து கொள்ள முடியாது. அவர்கள் நுனிப்புல் மேய்த்து விட்டு மார்க்சிய மத எதிர்ப்பை 'முன்னுக்குப் பின் முரணானது' என்று ஆட்சேபிக்கிறார்கள்.

''கம்யூனிஸ்டுகளே! நீங்கள் முதல் தரமாகக் கருத வேண்டிய கருத்துப் பிரச்சாரத்தை இரண்டாந்தரமாகக் கருதுகிறீர்கள். பண்பாட்டிற்கும், முன்னேற்றத்திற்கும் ஆயிரம் ஆயிரம் ஆண்டு விரோதியான மதத்தை எதிர்க்கும் போராட்டத்தை வர்க்கப் போராட்டத்திற்குக் கீழடங்கிய தாக்க விரும்புகிறீர்கள். வர்க்கப் போராட்டந்தான் அரசியல் பொருளாதாரத் துறைகளில் உறுதியான நடைமுறைக் கொள்கையுடைய போராட்டம் என்கிறீர்கள். நாங்கள் இதை ஆட்சேபிக்கிறோம்" என்கிறார்கள் அவர்கள்.

''இத்தகைய ஆட்சேபனையில் மார்க்சிய இயங்கு இயல் (Marxist dialectics) பற்றிய அறிவு சூன்யம் முழு வடிவத்தோடு காட்சியளிக்கிறது," என்கிறார் லெனின். மேற்படி ஆட்சேபனைக்காரர்களுக்குக் குழப்பம் உண்டு பண்ணுகிற முரண்பாட்டுக்குக் காரணம் வாழ்வில் காணப்படுகிற முரண்பாடுதான். இந்த முரண்பாடு இயங்கு இயல் ரீதியான முரண்பாடேயன்றி கம்யூனிஸ்டுகளின் சொல்லில் உள்ள முரண்பாடோ, கம்யூனிஸ்டுகளால் புதிதாகக் கற்பனை செய்யப்பட்ட முரண்பாடோ அல்ல என்றும் லெனின் அறிவுறுத்துகிறார்.

தமிழ் மக்கள் இந்த உண்மையை ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும். குறிப்பாக தி.மு.க. அணிகள்—தலைவர்களல்ல - மாணவர்கள், படிப்பாளி இளைஞர்கள். லெனின் குறிப்பிட்டுச் சிறப்பித்துக் கூறும் "இயங்கு—இயலை" (Dialectics) வருந்திப் படித்து நன்றாகச் சிந்தித்துத் தெளிய வேண்டுகிறோம். அப்பொழுதுதான் மதத்தைப் பற்றிய மார்க்சியக் கொள்கையைத் துல்லியமாகப் புரிந்து கொள்ள முடியும்.

## மத-எதிர்ப்பு தனிப் பிரச்சினை

"மத எதிர்ப்புப் பிரச்சாரம் பாட்டாளி மக்களிடம் காணப்படும் மத நம்பிக்கைகளை எதிர்த்து முறியடிக்கும் பிரச்சாரம்; இது வேறு, பாட்டாளி மக்கள் நடத்தும் வர்க்கப் போராட்டத்தின் பலாபலன்கள் வேறு, இரண்டும் தனித் தனியானவை என்று எல்லைக்கோடு வரைந்து காட்டுகிறவர்கள் பிரச்சினையை இயங்கு-இயல் அல்லாத முறையில் (Non-dialecticaly) புரிந்து கொள்கிறார்கள். எதார்த்த வாழ்வில் பிரிக்க முடியாதபடி இணைக்கப்பட்டுள்ள ஒன்றைப் பலவந்தமாகக் கத்தரித்தெடுக்க முயலுகிறார்கள்" என்று மத-எதிர்ப்பைத் தனிப் போராட்டமாக்குகிறவர்களுக்கு லெனின் பதில் சொல்கிறார். இந்த உண்மையை, ஒரு உதாரணத்தின் மூலமும் பின்வருமாறு விளக்குகிறார்.

## பிளவு படுத்தாதே!

ஒரு குறிப்பிட்ட ஜில்லாவில் ஒரு குறிப்பிட்ட தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் இரண்டு கருத்தோட்டங்களோடு வாழ்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். கணிசமான அளவு வர்க்க உணர்ச்சி பெற்றவர்கள்-கம்யூனிஸ்டுகள் (இவர்களை நாத்திகர்கள் என்று கருதுவது பொருந்தும்) கொஞ்சம் பேர். பெருவாரியான மற்றவர்கள் பின்தங்கிய தொழிலாளர்கள். இவர்கள் கிராமங்களோடும், விவசாயிகளோடும் உறவுடையவர்கள், கடவுள் நம்பிக்கையுடையவர்கள். மாதா கோவிலுக்குத் தொழுகைக்குப் போகிறவர்கள். மதகுரு சொன்னபடி நடப்பவர்கள். இத்தகைய தொழிலாளர்களை அந்த மதகுரு கிறித்துவத்

தொழிலாளர் சங்கம் என்ற ஒரு சங்கத்தில் திரட்டியிருக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அந்தப் பிரதேசத்தில் தொழிலாளர்களுடைய பொருளாதாரப் போராட்டம் ஒரு வேலை நிறுத்தத்தில் முடிந்திருக்கிறது என்றும் வைத்துக் கொள்வோம். இந்தச் சூழ்நிலையில் ஒரு கம்யூனிஸ்டின் கடமை என்ன? அவன் வேலை நிறுத்த வெற்றிக்குத்தான் மற்ற எல்லாவற்றையும்விட முதலிடம் கொடுக்க வேண்டும். போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிற தொழிலாளிகளை நாத்திகர்களென்றும், கிறித்தவர்களென்றும் பிரித்துப் பிளவு படுத்துவது பெருந்தவறு இந்தப் பிளவு வேலையை யார் செய்தாலும் அதை உறுதியாக எதிர்த்துப் போராட வேண்டும்."

இந்த உதாரணத்தைக் கொடுத்ததோடு லெனின் நிற்கவில்லை. ''இத்தகைய சூழ்நிலையில் மத எதிர்ப்புப் பிரச்சாரம் செய்வது அதிகப் பிரசங்கித்தனமாகவும் முடிகிறது" என்றும் சாட்டை கொடுக்கிறார். ''பின் தங்கிய தொழிலாளர்கள் நம்மைவிட்டு மிரண்டு ஓடிப்போகக் கூடாதே என்று பயந்து இதைக் கூறவில்லை. தேர்தலில் பெருவாரியான தொழிலாளர்களின் வாக்குகளை இழக்க நேரிடுமோ என்ற தொடை நடுங்கி மனப்பான்மையோடும் இதைக் கூறவில்லை. வர்க்கப் போராட்டத்தின் எதார்த்த வளர்ச்சியைப் பற்றிய கண்ணோட்டத்தோடேயே இதைக் கூறுகிறோம்" என்றும் லெனின் கம்யூனிஸ்டுகளின் நிலையைத் தெளிவு படுத்துகிறார். லெனின் மேலும், ''இன்றைய முதலாளித்துவ சமுதாயச் சூழ்நிலையைப் பொறுத்தமட்டில், மொட்டையான மத எதிர்ப்புப் பிரசாரத்தைவிட வர்க்கப் போராட்டத்தின் மூலம் நூறு மடங்கு அதிகப்படியாக, கிறித்துவத் தொழிலாளர்களைக் கம்யூனிசத்திற்கும், நாத்திகத்திற்கும் கொண்டுவர முடியும்" என்று தீர்க்க தரிசனத்துடன் உறுதி கூறுகிறார்.

''வேலை நிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ள தொழிலாளிகள், மத நம்பிக்கைகளுக்கு இணங்கப் பிளவு பட வேண்டுமென்பதுதான் இந்த மத குருமார்களின்

பிரார்த்தனை. எனவே, இத்தகைய காலகட்டத்தில், இம் மாதிரிச் சூழ்நிலையில் மத எதிர்ப்புப் பிரச்சாரம் செய்வோர் ''மாதா கோவிலுக்கும் மத குருமார்களுக்கும் ஐந்தாம் படை வேலை செய்கிறவர்களே ஆவார்கள்." லெனினுடைய இந்தக் கண்டனத்தைவிட, மத எதிர்ப்பில் இட பேதத்தையும், கால அகாலத்தையும் கவனியாமல் முந்திரிக் கொட்டை மாதிரி முந்திப் பாய்கிற கூட்டுக்காள் பாய்ச்சல் காரர்களை இதைவிட வேறு அழுத்தமாகக் கண்டிக்க முடியாது.

## அனுகூல சத்ருக்கள்

''என்னவானாலும் சரி, மத-எதிர்ப்புப் போர் நடந்தேயாக வேண்டும் என்று பரணி பாடும் அராஜக-ஆவேசப் பிறவிகள் உண்மையில் மத குருமார்களுக்கும் முதலாளி வர்க்கத்திற்குமே ஒத்துழைக்கிறார்கள்." மதத்தை ஒழித்த பிறகுதான் மறுவேலை என்று சண்டப்பிரசண்டம் அடிக்கும் 'புஸ்'வாணங்களுக்கும் லெனின் மேற்கண்டவாறு, நல்ல சூடு கொடுக்கிறார்.

''மார்க்சியவாதி ஒவ்வொருவனும் மத எதிரியாக இருந்து தீரவேண்டும் ஏனென்றால் மார்க்சியவாதி பொருள் முதல்வாதி. பொருள் முதல்வாதியிலும் இயங்கு இயல் பொருள் முதல்வாதி அவன். ஆகவே, அவன் மாறாத கொள்கை உபதேசியாக நின்று வெறும் தத்துவார்த்த ரீதியாக மட்டும் மதத்தை எதிர்த்துப் போராடக் கூடாது. பிரத்தியட்ச நிலைமையைக் கணக்கிலெடுத்துப்போராடியாக வேண்டும். கண்கூடாக நடைபெறுவதும் வேறெந்தப் போராட்டத்தையும் விடப் பொது மக்களுக்கு அதிக அறிவு வெளிச்சம் காட்டுவதுமான வர்க்கப் போராட்டத்தின் அடிப்படையில் போராடியாக வேண்டும். அதோடு ஒரு மார்க்சிய வாதிக்கு எதார்த்த சூழ்நிலையை ஒட்டுமொத்தமாகக் கணக்குப் போட்டுப் பார்க்க இயலவேண்டும்."

## அராஜகவாதமும் சந்தர்ப்பவாதமும்

அராஜகவாதத்திற்கும் சந்தர்ப்பவாதத்திற்கும் இடையிலுள்ள எல்லைக்கோட்டை நிர்ணயிக்க மார்க்சியவாதிக்கு

முடிய வேண்டும். இந்த எல்லைக்கோடு தன்னில் தாஞகி நிற்கவில்லை. சார்ந்து நிற்கிறது; இயங்கிக் கொண்டிருக் கிறது. சதா மாறிக் கொண்டிருக்கிறது. ஆயினும் அது இருக்கிறது.

''தத்துவ மாத்திரையான, சொற்ருெடர் ரீதியான' உண்மையில் பலவீனமான புரட்சித் தன்மை கொண்டது அராஜகவாதம்.

மத எதிர்ப்புப் போராட்டத்தைக் கண்டு அஞ்சுவது' மத எதிர்ப்புக் கடமையை மறப்பது ஆத்திகத்தோடு சமர சஞ் செய்துகொள்வது,வர்க்கப் போராட்டத்தின் நலன்களை முன் வைப்பதைவிட பாட்டாளி மக்களின் மத உணர்ச்சி யைப் புண் படுத்தக்கூடாது; அவர்களைப் பயமுறுத்தக் கூடாது என்ற எண்ணத்தை முக்கியப்படுத்தி முன்வைப்பது ''வாழு, வாழவிடு" என்று சாதுரிய நியதியோடு ஒழுகுவது ஆகிய சுயநல—வழவழாத் தன்மையுடையது சந்தர்ப்ப வாதம்.

''அராஜக வாதத்திலும் சரி, சந்தர்ப்ப வாதத்திலும் சரி, மார்க்சியவாதி விழுந்து விடக் கூடாது."

இவ்வாறு, இடதுசாரி அராஜகவாதத் திரிபு வலது சாரி சந்தர்ப்பவாதத் திரிபு ஆகியவற்றின் மீது, 'டார்ச் லைட்' அடித்துக் காட்டிவிட்டு மார்க்சிய ராஜபாட்டையில் செல்ல வழி காட்டுகிருர் லெனின். அப்பால் மதத்தைப் பற்றிய குறிப்பிட்ட சில பிரச்சினைகளில் கம்யூனிஸ்ட்களின் மனப்பான்மையை விளக்குகிருர்.

## மத குருவும் கம்யூனிஸ்ட் கட்சியும்

1. ஒரு மத குருவைக் கம்யூனிஸ்ட் கட்சியில் அங்கத் தினராகச் சேர்க்கலாமா?

பொதுவான அரசியல் பணிபுரிய ஒரு மதகுரு நம்மிடம் வருகிருர். மனப்பூர்வமாகக் கட்சியிட்ட கட்டளையை ஆற்றுகிருர். கட்சித் திட்டத்தை துளி கூட மறுக்கவில்லை; அப்படியே ஒப்புக் கொள்கிருர். அப்படிப்பட்ட மதகுருவைக்

கம்யூனிஸ்டு கட்சியில் அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ள ஆட்சேபனை இருக்கக் கூடாது.

இங்கு கட்சித் திட்டத்தின் உணர்ச்சி, கொள்கை ஆகியவற்றிற்கும் மதகுருவின் மதம் பற்றிய கொள்கைப் பிடிப்புக்கும் இடையில் முரண்பாடுகள் மோதுகின்றன. இந்தச் சூழ்நிலையில் மதகுரு கட்சிக்காகத் தன்னையே மறக்கிறார். எனவே இவர் கட்சியில் அங்கத்தினராகத் தகுதியுடையவர்.

மற்றொரு மதகுரு கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்கிறார். சேர்ந்த பிறகு தனது மதக் கருத்துகளைப் பிரச்சாரஞ் செய்வதையே முதற்பெரும் வேலையாக அல்லது தனிப்பெரும் வேலையாகக் கொள்கிறார். அப்படியானால் இந்த மத குரு கட்சியில் இருந்து 'கல்தா' கொடுக்கப்பட வேண்டியவர்.

இவ்வாறு விளக்கம் தந்துவிட்டு லெனின் சொல்கிறார்' ''நம்மைப் பொறுத்தமட்டில் எந்தச் சந்தர்ப்பத்திலும் மத குருக்களைக் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்க்க மாட்டோம் என்பதும் சரியல்ல. எதிர்மறையாக எந்தச் சந்தர்ப்பத்திலும் சேர்ப்போம் என்பதும் சரியல்ல" என்று.

## கடவுள் நம்பிக்கையும் தொழிலாளியும்

2. மத நம்பிக்கையுள்ள தொழிலாளிகளைக் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்க்கலாமா?

கட்டாயம் சேர்க்க வேண்டும் என்பதோடு மாத்திரமல்ல. அவ்வாறு சேர்க்கும் முயற்சியை இரட்டிப்பாக்க வேண்டும். இந்தத் தொழிலாளர்களின் மத நம்பிக்கையோடு லவலேசம் மோதுவதையும் நாம் முழு மூச்சோடு எதிர்க்க வேண்டும். நாம் கட்சியில் அவர்களைச் சேர்ப்பது கட்சித் திட்ட உணர்ச்சியை அவர்களிடம் உருவாக்குவதற்கேயன்றி அவர்களுடைய மத உணர்ச்சியோடு மோதுவதற்காக அல்ல.

## சோஷலிசம் எனது மதம்

3. ''சோஷலிசம் எனது மதம்" என்ற கோஷத்தைக் கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர் கொடுக்கக் கூடாதென்ற தடை உண்டா?

இல்லை. இந்தக் கோஷத்தை அப்படியே பார்த்தால் இது மார்க்சியத்திலிருந்து வாபஸ் வாங்கும் கோஷம்தான். ஆனால் இந்தக் கோஷத்தின் இழுப்பு மையம் வற்புறுத்துவது பல்வேறு சூழ்நிலையில் பல்வேறுவிதமாயிருக்கும். ஒரு பிரச்சாரப் பேச்சாளி தொழிலாளிக் கூட்டத்தில் பேசுகிறபொழுது பின்தங்கிய மக்களுக்குத் தனது கருத்தை விளக்கும் பொருட்டு ''சோஷலிசம் எனது மதம்' என்கிறார். ஒரு எழுத்தாளன் 'கடவுளைப் படைக்கும்' சோஷலிசத்தைப் பிரச்சாரம் செய்ய 'சோஷலிசம் எனது மதம்' என்கிறான். மேற்படி பேச்சாளியைக் கண்டிப்பது பிரச்சார சுதந்திரத்திற்கு இடம்மாறித் தடை விதிப்பதாகும். எழுத்தாளன் விஷயத்தில் கட்சி தடை விதிப்பது அவசியமும், கடமையும் ஆகும். 'சோஷலிசம் எனது மதம்' என்ற கூற்று சில விஷயத்தில் மதத்தில் இருந்து சோஷலிசத்திற்கு வருகிற ஒரு படி; மற்றவர் விஷயத்தில் சோஷலிசத்திலிருந்து மதத்திற்குப் போகிற ஒரு படி."

## தி.மு.க. தலைமையின் கண்கட்டு வித்தை

மதத்தைப் பற்றி மார்க்சிய லெனினியத்தின் அடிப்படைப் பார்வை என்ன? மத எதிர்ப்பில் சரியான பாதை எது, தவறான சந்தர்ப்பவாதத் திரிபுகள் எவை, மத எதிர்ப்பின் எல்லை விட்டம் எது? முதலியவை குறித்தும் லெனினுடைய ஸ்படிகத் தெளிவான கருத்துக்களை இதுவரை எடுத்துக் காட்டினோம். இதிலிருந்து 'ஜனசக்தி'யையும் தி.மு.க. ஏடுகளையும் படிக்கும் தமிழ் மக்கள், மதத்தைப் பற்றிய மார்க்சியக் கோட்பாடுகளுக்கும், தி.மு.க.வின் 'அறிவுப் புரட்சி'க்கும் உறவு உண்டென்று அவர்கள் அளப்பது அப்துல்காதருக்கும், அமாவாசைக்கும் உள்ள உறவு மாதிரித் தான் என்பதை உணர்வார்கள். தி.மு.க. தலைவர்கள்

தங்கள் கருத்துக்களையும் மார்க்ஸ், லெனின் ஆகிய உலக கம்யூனிஸ்டு தலைவர்களின் கருத்துக்களையும் இணைத்துக் காட்டுவது ''மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடும் கண்கட்டு வித்தை'' என்பதையும் அறிந்து கொள்வார்கள்.

நாம் மார்க்சிய மூலவர் கருத்துக்களை எடுத்துக் காட்டுகிறோம். அவர்கள் அவற்றை நமது குழப்படிக் கருத்துக்களாகப் புரட்டிக் காட்டி கம்யூனிஸ்டுகளைக் குறைப்படுத்தி விட்டதாக எக்களிப்படைகிறார்கள். அவர்கள் தங்களுடைய 'அற்புத மூளை'களில் வெடித்த முத்து முத்தான கருத்து மணிகளை'' நம்முன் அள்ளி வீசுகிறார்கள். அவற்றை மார்க்சியத்தின் 1954வது ஆண்டுத் தமிழகப் பதிப்பு என்று மாய்மாலம் செய்கிறார்கள்.

ஏன் இப்படிப் பாசறை வகுத்துப் பரணி பாடுகின்றனர் தி.மு.க. தலைமையினர்? மார்க்சியமும் அதன் செயல் திறனும், புகழும் நாள்தோறும் வளர்கின்றன. உலக முழுவதிலும் மார்க்ஸ், ஏங்கெல்ஸ், லெனின், ஸ்டாலின் ஆகிய மேதைகளின் செல்வாக்கு பொதுமக்களிடம் மென் மேலும் பெருகுகிறது. தமிழகத்தில் தி.மு.க. அணிகளிடையிலும், தமிழ்ப்பொதுமக்களிடையிலும் இந்தச் செல்வாக்குப் பெருகிக் கொண்டிருக்கிறது. எனவே தி.மு.க. தலைவர்கள் தங்களுடைய கருத்துக்களுக்கு 'மார்க்சிய' ஆடை உடுத்தி கழக அணிகளையும் பொதுமக்களையும் திருப்திப்படுத்த நிர்ப் பந்திக்கப்படுகிறார்கள்.

5-12-54

# மதத்தைப் பற்றி சோவியத் குடியரசின் கொள்கை

ரஷ்யாவில் புரட்சி—முற்காலத்தில் வைதீகக் கிறித்து மதமே கொடிகட்டிப் பறந்தது. மற்ற மதங்கள் அடக்கி ஒடுக்கப்பட்டன. எந்த மதத்திலும் சேர, சேராதிருக்க மக்களுக்கு உரிமையில்லை, வைதீகக் கிறித்துவ மதத்தில் சேருவதற்கே மக்கள் ஊக்குவிக்கப்பட்டனர்.

கிறித்து மதத்திலிருந்து இதர மதங்களில் சேருவதென்பது சிறைத் தண்டனையை விலை கொடுத்து வாங்குவதாயிருந்தது. நாத்திகமோ, மகாபாதகமாக மதிக்கப்பட்டது. மாதாகோவிலில் மதச் சடங்குகள் செய்து கொள்ளாதவர்கள் சித்திரவதை செய்யப்பட்டனர். அவர்களுடைய குழந்தைகளுக்குச் சட்டபூர்வமான எந்தவித உரிமையும் கிடையாது.

ரஷ்ய வைதீக சர்ச்சு, இதர மதங்களுக்கு மறுக்கப்பட்ட சகல சலுகைகளையும் வாய்ப்பு வசதிகளையும் அதிகாரத்தோடு ஏகபோகமாக அனுபவித்து வந்தது. இந்தச் சர்ச்சுக்குத் தலைவன் ஜார் மன்னன். ஜாருக்கு சர்ச் அடங்கிக் கிடந்த நிலைமை ராஜ்யத்தின் சட்டங்களிலும் எதிரொலித்தது. ''கிறித்துவ அரசரான ஜார் சக்கரவர்த்தி தான் ஆதிக்கம் வகிக்கும் வைதீகக் கிறித்துவ மார்க்கத்திற்கும் பரிசுத்த மாதா கோவிலுக்கும் காவலரும் புரவலரும் ஆவார்'' என்று மதத்தைப் பற்றிய ஜாரின் பங்கைச் சட்டம் வரையறுத்தது.

'சர்ச்'க்கு உடைமையாயிருந்த ஸ்தாவர ஜங்கம சொத்துகளுக்குக் கணக்கு வழக்கு இல்லை. தொழிலாளர் விவசாயப் பெருமக்களைச் சுரண்டிச் சூறையாடுவதில் பகாசுரமுதலாளி

யாகவும் இராட்சஸ நிலப்பிரபுவாகவும் 'சர்ச்' விளங்கிற்று. பாதிரிமார்களுக்குப் போலீஸ் அதிகாரமும் இருந்தது.

தேசிய இன ஒடுக்கு முறையோடு மதச் சித்திரவதையும் கைகோர்த்துச் சதிராடிற்று. வைதீகக் கிறித்து மதத்தைச் சேர்ந்தவர்களுக்கு மாத்திரம் பள்ளிகளிலும் பல துறைகளிலும் உத்தியோகங்கள் வழங்கப்பட்டன.

மனச்சாட்சி சுதந்திரம், மத சுதந்திரம் அன்று ரஷ்யாவில் மருந்துக்குக்கூடக் கிடையாது.

இது மதத்துறையில் ஜாரின் எதேச்சாதிகார ஆட்சியில் கண்ட எதார்த்தச் சூழ்நிலை.

இந்தச் சூழ்நிலையைச் சரியாகக் கணக்குப் போட்டுத் தான் ஜாராட்சியை முறியடிக்கப் போராடிய ரஷ்யாவின் முற்போக்குப் பிரதிநிதிகள் பின்வரும் கோரிக்கைகளை வகுத்தனர்.

1. ''மனச்சாட்சி சுதந்திரம் வேண்டும்."

2. ''சர்க்காரிலிருந்து 'சர்ச்சை' (மாதா கோவில்)யும் 'சர்ச்'சிலிருந்து பள்ளிக்கூடத்தையும் பிரிக்க வேண்டும். அதாவது மத சுதந்திரம் வேண்டும்".

1883ல் ''தொழிலாளர் விடுதலைக் குழு" என்ற முதல் ரஷ்ய மார்க்சியக் குழு தோன்றியதும் ''தங்கு தடையற்ற மனச்சாட்சி சுதந்திரம்" வேண்டும், ''மத பேதம், தேசிய இன பேதம் பாராட்டாமல்" சகல மக்களுக்கும் சம உரிமையும், சம அந்தஸ்தும் அளிக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கைகளை வைத்தது.

1902ல் லெனின் தீட்டிய ரஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சியின் திட்டமும், சர்க்காரிலிருந்து 'சர்ச்சும்' சர்ச்சிலிருந்து சகல கல்விச் சாலைகளும் பிரிக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கையையே வைத்தது. இந்தக் கொள்கையே ரஷ்யக் கம்யூனிஸ்டுக் கட்சியின் மதம் பற்றி புரட்சி முற்காலக் கொள்கையாக இருந்தது.

## புரட்சிக்குப் பின் மதத்தின் நிலைமை என்ன?

1917 நவம்பர் 7ல் நடந்த சோஷலிஸ்டுப் புரட்சி சர்க்காருக்கும், 'சர்ச்சு'க்கும் இருந்த பழைய உறவுகளை இருந்த இடம் தெரியாமல் அழித்துத் துடைத்து விட்டது. 1918 ஜனவரி 23ம் தேதி சோவியத் சர்க்கார் மத சுதந்திரம் பற்றியும் சர்க்காருக்கும், மதத்திற்குமுள்ள உறவு பற்றியும் ஓர் உத்தரவு அறிக்கையை வெளியிட்டது. அதில் பின்வரும் அம்சங்கள் காணக்கிடக்கின்றன.

1. சர்க்காரிலிருந்து 'சர்ச்' பிரிக்கப் படும்.

2. மனச்சாட்சி சுதந்திரத்தைத் தடுத்து வந்த சட்டங்களும், மதத்தின் பேரால் கிடைத்து வந்த சலுகைகளும் ரத்து செய்யப்படும்.

3. ஒவ்வொருவரும் தமக்கு இஷ்டமான மதத்தை ஏற்றுக் கொள்ளலாம். அல்லது மதமின்றி வாழலாம். குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்தவன் அல்லது சாராதவன் என்று பாகுபடுத்துவது எல்லா வழியாலும் தடை செய்யப்படும். சர்க்கார் தஸ்தாவேஜுகளிலுள்ள குடி மக்களின் மதக் குறிப்புகள் நீக்கப்படும்.

4, சர்க்கார் நடவடிக்கைகளில் மதச் சடங்குகளுக்கு இடமிராது.

5. மற்றவருக்கு இடையூறு இல்லாமலும் மற்றவர் உரிமையைப் பறிக்காமலும் இருக்கும் அளவுக்கு மதச் சடங்குகளை நடத்தும் உரிமை அனுமதிக்கப்படும்.

6. மத நம்பிக்கைகளைச் சாக்காகக் கொண்டு யாரும் சமூகக் கடமைகளைத் தட்டிக் கழிக்க உரிமை கிடையாது.

7. மத ரீதியான சத்தியங்களும், உறுதி மொழிகளும் ஒழிக்கப்படும். அவசியமான சந்தர்ப்பங்களில் நேர்மையான வாக்குறுதிகளே போதும்.

8. சமூகச் சடங்குகள் (மணவினை, பிறப்பு, இறப்பு போன்றவை) குறிப்பிட்ட அதிகாரிகளால் மட்டுமே நடத்தி வைக்கப்படும்.

9. 'சர்ச்சி'லிருந்து (திருச்சபை மடாலயங்களிலிருந்து) பள்ளிக்கூடங்கள் பிரிக்கப்படும்.

10. சர்க்கார் பள்ளிக்கூடங்கள், தனிப்பட்ட பள்ளிக் கூடங்கள் யாவற்றிலும் மத போதனை தடைசெய்யப்படும். பொதுவான விஷயங்களே போதிக்கப்படும்.

இந்த உத்தரவு அறிக்கையின் மூலம், லெனின் 1905ல் வகுத்த வழியைச் சோவியத் சர்க்கார் உறுதியாகக் கடைப் பிடித்தது.

## விடுவிக்கப்பட்டது

சர்க்காரிலிருந்து 'சர்ச்'சைப் பிரித்ததன் மூலம் சர்க்கார் இயந்திரத்தில் ஒரு அங்கமாகக் கட்டுண்டு கிடந்த ரஷ்ய வைதீகச் சர்ச்சுக்கு விடுதலை கிடைத்தது. இந்தச் சர்ச்சின் ஆதிக்கத்திற்கு அடங்கிக் கிடந்த ரோமன் கத்தோலிக்க, பாப்டிஸ்டு போன்ற ஏனைய கிறித்துவ மார்க்கங்களுக்கும், இஸ்லாம் போன்ற இதர மதங்களுக்கும் விடுதலை கிடைத்தது.

மேற்படிப் பிரிவினையின் மூலம் மத ஸ்தாபனங்களுக்கு, அவற்றின் எல்லைக்கு அப்பாலுள்ள நடவடிக்கைகளில் ஈடு படுவதிலிருந்து விடுதலை கிடைத்தது. மக்களுக்கு மத ஸ்தாபனங்களில் கட்டாயம் பங்குகொள்ள வேண்டுமென்ற நிர்ப்பந்தத்திலிருந்து விடுதலை கிடைக்கிறது.

சர்க்காரின் பொதுப் பணத்திலிருந்து வைதீக சர்ச்சுக்குச் செலவழித்த பண விரயமும் இந்தப் பிரிவினை மூலம் ஒழிக்கப்பட்டது.

இதனால் மதகுருமார்களுடைய அல்லது மத பக்தியுள்ள சாதாரண மக்களுடைய பிரஜா உரிமை பறி போகவில்லை. நாட்டின் அரசியல் வாழ்வில் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொள்வதற்குரிய சாத்தியப்பாடும் பறி போகவில்லை. சர்க்கார் சன்னிதானத்தில் மத சமத்துவம் ஏற்பட்டது. சர்க்கார் எந்த மதத்திற்கும் எந்தச் சலுகையும் கொடுக்க வில்லை. நாட்டின் சட்டத்தை மீறக் கூடாது என்பது

மட்டுமே சர்க்கார் மதங்களுக்கு விதித்த நிபந்தனை. இதனால் உண்மையான மத சுதந்திரம் ஏற்பட்டது. இதனால் வைதீக சர்ச்சைச் சேர்ந்த சில "மலை விழுங்கி மகா தேவர்கள்" ஆரம்பத்தில் எதிர்ப்புக் காட்டினாலும் நாளா வட்டத்தில் எல்லா மதஸ்தர்களும் சர்க்காரை முழு மனத்தோடு ஆதரிக்கும் நிலை உருவாயிற்று.

## 1927இல் ஸ்டாலின்

1927ல் சோவியக் யூனியனுக்குச் சென்றிருந்த அமெரிக்கத் தொழிலாளர் குழு சோவியத் யூனியனில் மதத்தின் நிலைமை பற்றிக் கேட்ட கேள்விக்கு ஸ்டாலின் கீழ்வருமாறு பதில் அளித்தார்.

"எந்த மதத்தில் சேர்வதற்கும் குடி மக்களுக்கு எங்கள் சட்டம் இடம் கொடுக்கிறது. இது ஒவ்வொரு மனிதனுடைய மனச்சாட்சியையும் பொறுத்த விஷயமாகும். ஆகவேதான் நாங்கள் சர்க்காரிலிருந்து சர்ச்சைப் பிரித்து விட்டோம். ஆனால் சர்க்காரிலிருந்து சர்ச்சைப் பிரித்து ஒவ்வொருவருக்கும் மத சுதந்திரம் உண்டு என்று பிரகடனப்படுத்திய பொழுதே, ஒவ்வொருவருக்கும் எந்த ஒரு மதத்திற்கும் அல்லது எல்லா மதங்களுக்கும் எதிரிடையாக நியாயம் கூறிப் பிரச்சாரக் கிளர்ச்சி செய்வதற்கு உரிமையுண்டு என்றும் பிரகடனப்படுத்தியுள்ளோம்."

சோவியத் யூனியனில் மதத்தை அடிப்படையாகக் கொண்டு பாகுபாடு காட்டப்படுவதில்லை. மதவாதிக்கும் நாத்திகனுக்கும் இடையில் பாகுபாடு காட்டப்படுவதில்லை. தொழிற்சாலைகளிலும், அலுவலகங்களிலும் சரி, கூட்டுப் பண்ணைகளிலும் பள்ளிக்கூடங்களிலும்சரி இந்தப் பாகுபாடு காட்டப்படுவதில்லை. ஒருவன் ஒரு அலுவலில் ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டாலும் சரி, ஒருவன் பள்ளிக்கூடத்தில் புகுந்து விட்டாலும் சரி, அல்லது பொது ஜன ஸ்தாபனங்களில் அங்கம் பெற்று விட்டாலும் சரி அவனுடைய மத நம்பிக்கையைப் பற்றித் தகவல் தெரிவிக்க அவன் கீடமைப்பட்டவனல்ல. சர்க்காரின் ஜனக் கணிதப் புத்தகத்தில் மதவாரிப் பிரிவினையைப் பார்க்க முடியாது.

சர்க்கார்—சர்ச்சுப் பிரிவினையும், சர்ச்-கல்விச் சாலைப் பிரிவினையும் சோவியத் மக்களுக்கு யார் மீதும் யாரும் எந்த மதத்தையும் சுமத்தாமல், மதப்பிரிவினையில் மனச் சாட்சிப் படி தங்குதடையின்றி நடந்து கொள்ளப் பரிபூரண விடுதலையை அளித்துள்ளன.

## ஸ்டாலின் அரசியல் சட்டத்தில்

1936ல் சோவியத் யூனியன் அரசியல் சட்டத்தின் நகலின் மீது ஸ்டாலின் உரை நிகழ்த்தினுர். அப்பொழுது ஒரு திருத்தத்திற்குப் பதில் சொல்லுகையில் பின்வருமாறு சொன்னுர். ''நகல் சட்டத்தின் 124வது பிரிவுக்கு ஒரு திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மதச் சடங்குகளுக்குத் தடை விதிக்க வேண்டுமென்று பொருள்படும் விதத்தில் 124வது பிரிவில் மாறுதல் செய்ய வேண்டுமென்று இந்தத் திருத்தம் கூறுகிறது. இந்தத் திருத்தத்தை நிராகரிக்க வேண்டுமென்று நான் கூறுகிறேன். ஏனென்ருல், நமது அரசியல் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைக்கு இது நேர் விரோதமானது.''

1918 ஜனவரி 23-ந் தேதி வெளியிட்ட உத்தரவு அறிக்கை (பிரகடனம்)யில் காணப்படுகிற **மதசுதந்திரம்** என்ற கொள்கைதான் ஸ்டாலின் அரசியல் சட்டத்தின் 124வது பிரிவில் காணப்படுகிறது. அந்தப் பிரிவு கூறுவதாவது:

''குடி மக்களின் மனச்சாட்சி சுதந்திரத்தை உறுதிப் படுத்துவதற்காக, சர்க்காரிடமிருந்து சர்ச்சும், சர்ச்சிலிருந்து பள்ளிக்கூடமும் பிரிக்கப்படுகிறது. மதத்தொழுகை சுதந்திரமும், மத எதிர்ப்புப் பிரச்சார சுதந்திரமும் எல்லா மக்களுக்கும் உண்டு என்பதை அரசியல் சட்டம் அங்கீகரிக்கிறது.''

இவ்வாறு மத சுதந்திரம் அளிக்கப்பட்டதன் விளைவு என்ன?

## மதவாதிகள் ஆதரவு

ஹிட்லர்—எதிர்ப்பு யுத்தத்தில் சோவியத் யூனியனி லுள்ள சகல மத ஸ்தாபனங்களும் ஒரு மனிதன் மாதிரி ஒன்றுக நின்று சோவியத் சர்க்காருக்கு நிபந்தனையற்ற ஆதரவு அளித்தனர். ஜார்ஜீய வைதீகச் சர்ச்சும் அர்மேனியன் மாதா கோவிலும், முஸ்லிம்களும். கத்தோலிக்கர்களும். புராட்டஸ்டண்டுகளும், பாப்டிஸ்டுகளும், இதர எல்லா மதக்காரர்களும் செஞ்சேனைக்கு நிதி வசூலித்தளித்து அதன் விடுதலைப் போராட்டப் பணியை மனமாரப் புகழ்ந்தனர்.

''நாங்கள் சோவியத் சர்க்காரை ஆதரிப்பது பயத்தால் அல்ல. அப்போஸ்தலரின் போதனையின்படி, மனச்சாட்சியின் தூண்டுதலால்தான் ஆதரிக்கிறோம்" என்று மகாகுரு ஸெர்கியஸ் கூறியுள்ளார். இவர் சோவியத் யூனியனிலேயே மிகப் பெரிய பாதிரியார்.

ஜார் ஆட்சியில் வைதீகச் சர்ச்சின் ஆதிக்கத்தில் முஸ்லிம்களாகிய நாங்கள் மதச் சித்திரவதைக்கு ஆளானோம். இன்று பரிபூரண சுதந்திரத்தோடு வாழ்கிறோம்" என்று மத்திய ஆசியாவிலுள்ள பல முஸ்லிம் மதத் தலைவர்கள் நன்றியறிதலுடன் மகிழ்ச்சி பொங்கக் கூறியுள்ளார்கள்.

உள்நாட்டு மதத் தலைவர்கள் மட்டுமல்ல; வெளிநாட்டுப் பார்வையாளர்கள் கூறுவதையும் கவனியுங்கள்!

## பிரிட்டிஷ் குழு

1951ல் சோவியத் யூனியன் சென்றிருந்த பிரிட்டிஷ் தொழிலாளர் குழு லண்டனில் வெளியிட்டுள்ள ஒரு நூலில் கூறுகிறார்கள்.

''சோவியத் யூனியனில் மத சுதந்திரம் இருக்கிறது. மத வாழ்வு நடத்துவதற்காக யாரும் தண்டிக்கப்படவில்லை. மதமற்றவர்களுக்கும் அங்கு சுதந்திரம் உண்டு. 'சர்ச்சு'களில் எத்தனையோ குழந்தைகள் தொழுவதைப் பார்த்தோம். ஸ்டாலின்கிராடில் அழிக்கப்பட்ட இரண்டு சர்ச்சுகள் மீண்டும் கட்டிக் கொடுக்கப்பட்டுள்ளன."

ஸ்டாலின் சட்டத்தைத்தான் மாலங்கோ ஆட்சி கடைப் பிடிக்கிறது என்பது உலகறிந்த ரகசியம்.

உதாரணத்திற்கு நவம்பர் 12-ந் தேதி 'ஹிந்து' பத்திரிகையின் 3ம் பக்கத்தைத் திருப்பிப் பாருங்கள். 11-ந் தேதிய மாஸ்கோ செய்திஒன்றுவெளிவந்திருக்கிறது. ''கம்யூனிஸ்டுக் கட்சியின் சில கமிட்டி அங்கத்தினர்கள் மத எதிர்ப்புப் போராட்டத்தில் அத்துமீறிச் சென்று விட்டார்கள் என்று சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் முதல் செயலாளரான நிகிதா குருஷ்சேவ் கண்டிக்கிறார். கட்சிப் பத்திரிகையான பிராவ்தாவும் கண்டிக்கிறது."

## இழிவுறுத்தும் தாக்குதல் புறம்பானது

''இழிவுறுத்தும் தாக்குதல் கட்சியின் கொள்கைக்குப் புறம்பானது. மனச்சாட்சி சுதந்திரத்திற்கு ஸ்டாலின் சட்டம் அளித்துள்ள உத்தரவாதத்திற்கு விரோதமானது" என்று கண்டிக்கிறது பிராவ்தா. தான் கையொப்பமிட்ட மத்தியக் கமிட்டியின் அறிக்கையில் குருஷ்சேவ் கூறுகிறார்: ''மிகப் பெரும்பாலான ஜனத்தொகை மத நம்பிக்கையிலிருந்து விடுதலை பெற்றுவிட்டது. ஆனால் நாட்டுக்காக நேர்மையுடன் தங்கள் சமூகக் கடமைகளை நிறைவேற்றுகிற சிலர் பலர் இன்னும் பல்வேறு மத நம்பிக்கைகளில் பிடிப்பு உடையவர்களாக இருக்கிறார்கள். அவர்களை அரசியல் சந்தேகத்தோடு இழிவாகத் தாக்கிப் பிரச்சாரம் செய்வது அற்பத்தனமான செயல்; கேடு சூழ்கிற வேலை."

''சகிப்புத் தன்மை கொண்ட, முறையான பிரச்சாரம் தான், மத நம்பிக்கையுடையவர்கள் அவர்களுடைய மதத் தவறுகளிலிருந்து விடுபட உதவி செய்யும். மாறாக, சர்க்கார் நடவடிக்கைகளும் இழிவுப் பிரச்சாரங்களும் அவர்களுடைய குருட்டு நம்பிக்கைகளை உறுதிப்படுத்தவே துணை போகும்!"

மதத் துறையில் லெனினும், ஸ்டாலினும், மாலங்கோவும், குருஷ்சேவும் மேற்கூறிய கொள்கையைக் கடைப் பிடித்ததால் விளைந்த விளைவு என்ன?

**சுத்தானந்தர் சொல்கிறார்**

தமிழ் நாட்டில் ஒரு யோகியும், ஆஸ்திகரும், சிறந்த தமிழ் எழுத்தாளரும், தமிழகம் நன்கு அறிந்தவரும் அண்மையில் சோவியத் யூனியன் சென்று வந்தவருமான சுவாமி சுத்தானந்த பாரதியாரைக் கொண்டு பதில் சொல்ல வைக்கிறேன்; ''தினமணி'' சுடர் அனுபந்தத்தில் (5-12-54) தாம் எழுதிய ''ரஷ்யாவும் சமயமும்" என்ற கட்டுரையில் பின்வருமாறு யோகி அவர்கள் கூறுகிறார்கள்.

''ரஷ்யாவில் ஏராளமான சர்ச்சுகள் இன்றும் உள்ளன. அன்று கட்டிய மணி இன்றும் முழங்குகிறது...

''சோவியத் ரஷ்யா விஞ்ஞானத்தை உயிராகவும், சமுதாய சேவையை நரம்பாகவும், நாட்டன்பே உடலாகவும் கொண்ட புதிய சமுதாயமாகும். அங்கே வளர்வது விஞ்ஞான சமயம்; பகுத்தறிவுச் சமயம்...

''மாஸ்கோவிலுள்ள வைதீகச் சர்ச்சில் அன்பர்கள் அணி அணியாக நின்று பிரார்த்தனை செய்வதைக் கண்டேன்...

''ரஷ்யாவிலுள்ள இஸ்லாமிய நாடுகள் ஆறு. ஆறு நாடுகளிலுள்ள மசூதிகளில் தொழுகைகள் நடைபெறுகின்றன.

''எனினும் பொது மக்கள் சமயப் பற்று இல்லாதவர்களே. இருபது கோடி ரஷ்யாவில் சுமார் லட்சம் பேர் மதத்தை நம்பலாம். மற்றவர்களிடம் உங்கள் சமயம் என்னவென்றால் ''எங்கள் தாத்தா, பாட்டி இஸ்லாமியர், கிறித்துவர். நாங்கள் பகுத்தறிஞர் (Scientific atheists) விஞ்ஞான நாத்திகர்" என்பர்.

பரிபூரண மத சுதந்திரம் அளித்துச் சமுதாய ரீதியாக ''விஞ்ஞான நாத்திகத்"தை அதாவது விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட மனித வாழ்வை உருவாக்கியிருக்கிறார்கள் சோவியத் யூனியனில்."

26-12-54

